சென்னை உயர்நீதிமன்றப் பிரதம நீதிபதி,
மேதகு. மு. மு. இஸ்மாயீல் அவர்களின்—

# முகவுரை

சமீப காலத்தில் தமிழ் மொழியில் பெரும் புரட்சி செய்தவர்களில் தலையானவர் காலம் சென்ற கவிச்சக்ரவர்த்தி சுப்ரமணிய பாரதியார் ஆவார். ஒரு கவிஞனைப் பற்றி பல மாதிரியாக எண்ணுபவர்கள் உண்டு. ஆனால், எந்தக் கவிஞனையும் தன்னுடைய படைப்பின் மூலமாக அமரத்துவம் பெறவேண்டுமானால் அவனுடைய படைப்பினுடைய கருவூலம் பிரபஞ்சத்தினுடைய பரந்த நன்மையாக இருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட மனிதயினத்தினுடையவோ அல்லது ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பினுடையவோ தன்மையை மாத்திரமோ கருத்தில் கொண்டு, இலக்கியமோ, கவிதையோ படைக்கும் எவனும் அமரத்துவம் பெற்றுவிட முடியாது. அந்த முறையில் பார்க்கும்பொழுது கவிச்சக்ரவர்த்தி சுப்பிரமணிய பாரதியார் அமரத்துவம் பெற்றவர். காரணம் என்னவென்றால், அவருடைய படைப்பு எந்தக் குறுகிய நோக்கத்தோடும். அல்லது குறுகிய குறிக்கோளுக்காகவும் படைக்கப்பட்டது அல்ல. இக்கால மக்கள் பெரும்பாலும் சுப்பிரமணிய பாரதியாரை ஒரு 'தேசீயகவி' என்றுதான் கருதுகிறார்கள். அதுவும் கூட இந்தப் பரம்பரையினருக்குத் தெரியுமா என்பது சந்தேகத்திற்குரியதுதான். ஆனால், இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன்னர், இந்தியாவின் விடுதலைப் போராட்டத்தில் பங்கு

கொண்டவர்கள் சுப்ரமணிய பாரதியாரின், தேசீய உணர்ச்சி களை உலுக்கும் கவிதைகளை மேடையின்மீது பாடிக் கேட்பவர் களுடைய உள்ளத்தையும் உணர்ச்சியையும் உருக்கிப் பரவசப் படுத்திஞர்கள். அந்தப் பரவசத்தின் காரணமாக அவர் களிடையே ஒரு வேகமும், வீரமும், வெறியுங்கூட உண்டாயிற்று. ஆனல், சுப்ரமணிய பாரதியாரை ஒரு தேசீய கவி என்று மாத்திரம் நாம் கூறுவோமேயாஞல், அவரை முழுமையாகப் புரிந்து கொண்டவர்களாக ஆகமாட்டோம். உண்மையில் காந்திஜியைப் போல அவரும் அரசியலுக்கு வந்தது தம்முடைய பரந்த குறிக்கோளின் ஒரு பகுதியை நிறைவேற்றிக் கொள் வதற்கான வாய்ப்பு கிடைத்ததஞலேயே. காந்திஜி தென்னுப் பிரிக்காவில் நடத்திய போராட்டம் நிறவெறியை ஒழிப்பதற் காகத்தான். இந்த நிறவெறிப் போராட்டத்திற்குக்கூட ஏதோ இந்தியர்கள் கருப்பர்கள் என்ற காரணத்திஞல் வெள்ளையர்கள் அவர்களைக் கேவலமாக எண்ணிஞர்கள், நடத்திஞர்கள் என்பது மாத்திரம் காரணமாகாது. இறைவஞல் படைக்கப்பட்ட மனிதர்கள் அனைவரும் அந்த இறைவனுடைய மக்கள் என்ற முறையிலே சமமானவர்கள்; அந்தச் சமத்துவம் நிறத்திஞலோ மொழியிஞலோ, மதத்திஞலோ, தேச எல்லையிஞலோ அழிந்து படக்கூடாது என்ற அடிப்படைதான் அந்தப் போராட்டத் திற்குக் காரணம். அந்தப் போராட்டத்தின் ஒரு அங்கமாகவே இந்திய விடுதலைப் போராட்டமும் பின்னர் அவருக்கு அமைந்தது. அதுபோலவே பாரதியரும் முதலில் ஒரு சமூக சீர்திருத்தவாதியாகவே எண்ணவும், பேசவும், எழுதவும் தொடங்கிஞர். அந்தச் சமூகச் சீர்திருத்தத்தின் ஒரு பகுதியே இந்திய சுதந்திரத்திற்காகப் போராடியதாகும். அப்படியே அவர் படைத்த தேசீய கவிதைகளும் ஒரு இலட்சிய சமுதாயத் தைச் சிருஷ்டிக்க அவர் விரும்பியதின் ஒரு எதிரொலியாகவே அமைந்தன என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்த அடிப்படையை திரு. பெரியசாமித் தூரன் அவர்கள் 'பாரதியாரும் சமூகமும்' என்ற இந்த நூலில் தெளிவாக விளக்குகிருர்கள். பாரதியாருடைய கவிதைகளையும், வசன

களையும் பல தலைப்புக்களில் தொகுத்து, அவற்றிற்கு முன் தன்னுடைய குறிப்பையும், கருத்துக்களையும் கொடுத்துப் பாரதியார் சமூகச் சீர்திருத்தவாதியாகவே தமது எழுத்துப் பணியைத் தொடங்கினார் என்று தூரன் அவர்கள் நிரூபிக்க முயல்கிறார்கள். பாரதியாருடைய படைப்புக்களை முழுமையாக வும், ஆழ்ந்தும் படித்தவர்கள் தூரன் அவர்களுடைய இந்தக் கருத்திற்கு இணங்கவே செய்வார்கள். மேலெழுந்தவாரியாக அவருடைய தேசியப் பாடல்களைப் படித்தவர்களும்கூட இந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ளவேசெய்வார்கள் என்பதில் ஐயமில்லை. உதாரணமாக, நாம் அனைவரும் பாரதியாருடைய பாப்பாப் பாட்டினை நன்றாக அறிவோம். அந்தப் பாப்பாப் பாட்டிலும் கூட அவருடைய சமூகச் சீர்திருத்த நோக்கமே வெளியாகிறது என்பதைச் சற்று உற்றுக் கவனித்தால் விளங்கும். இதற்கு உதாரணம்,

**"சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்**
**தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்;**
**நீதி, உயர்ந்த மதி, கல்வி—அன்பு**
**நிறைய உடையவர்கள் மேலோர்."**

என்ற ஒன்றே போதும். அது போலவே 'முரசு' என்ற பாடல் தொகுதியிலும், அடியிற்கண்ட பாடல்கள், இந்த நோக்கத்தை எடுத்துக் காட்டப் போதுமானவை.

**"சாதிப் பிரிவுகள் சொல்லி—அதில்**
**தாழ்வென்றும் மேலென்றும் கொள்வார்,**
**நீதிப் பிரிவுகள் செய்வார்—அங்கு**
**நித்தமும் சண்டைகள் செய்வார்."**

**"சாதிக் கொடுமைகள் வேண்டாம்; அன்பு**
**தன்னில் செழித்திடும் வையம்;**
**ஆதர வுற்றிங்கு வாழ்வோம்;—தொழில்**
**ஆயிரம் மாண்புறச் செய்வோம்,"**

**"பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடும் ஈசன்;
மண்ணுக் குள்ளே சிலமூடர்—நல்ல
மாத ரறிவைக் கெடுத்தார்"**

இந்த நோக்கில் தான் பாரதியாருடைய பாடல்களையும் வசனங்களையும் தூரன் அவர்கள் ஆராய்கிறார்கள். பெரும் பாலோருக்குத் தெரியாத பல விஷயங்கள் இந்த நூலில் இடம் பெற்றிருக்கின்றன. அவ்வப்போழுது பாரதியாரைப் பற்றி வெளிவந்த நூல்களில் இவை காணப்படுவது உண்மைதான் இருந்தாலும், ஒரு குறிப்பிட்ட கோணத்திலிருந்து இவற்றைத் தொகுத்து இப்பொழுது தூரன் அவர்கள் நமக்கு வழங்கு கிறார்கள். இவற்றைப் படித்து சுமார் 60,70 ஆண்டுகளுக்கு முன்னால் பாரதியார் எழுதியது நம்முடைய இன்றைய சமுதாயத்தின் நிலைக்கும்கூடப் பொருந்தும் என்பதை உணரும் பொழுது ஆச்சரியமே யுண்டாகும். ஆனால் எந்த உண்மைக் கவிஞனும் ஒரு தீர்க்கதரிசியே என்பதை உணரும்பொழுது இதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை என்பது தானாகவே புலப்படும். உலக வாழ்க்கையின் பயனைப்பற்றியும், மனிதன் எதற்காகப் பிறந்தான் என்பதைப் பற்றியும் பேசுகின்ற பாரதியார், ஜப்பான் நாட்டினுடைய தொழிற் கல்வியைப் பற்றியும், இந்திய நாட்டிற்குத் தேவையான தேசீயக் கல்வியைப் பற்றியும் எழுதத் தயங்கவில்லை. இப்படியெல்லாம் இவர் எழுதியிருப்பதைப் படிக்கும்பொழுதுதான் இன்று வாழ்வதைப் போல வாழ்கின்ற காலம் ஒன்று வரும் என்று முன்கூட்டியே எதிர்பார்த்து, அதற்காக அவர் நம்மை எச்சரித்து வழிகாட்டி யிருக்கிறார் என்று சொல்லவே தோன்றும். உண்மையில் பாரதியாருடைய கருத்திலும், எழுத்திலும் அகப்படாத சமுதாய வாழ்க்கையின் அம்சம் எதுவுமேயில்லை என்று சொல்லக்கூடிய அளவுக்கு, அவருடைய வசனமும், கவிதையும் எல்லாவற்றையும் உள்ளடக்கியவையாக அமைந்திருக்கின்றன

பாரதியாருடைய படைப்புக்களை இந்தக் கோணத்திலிருந்து நாம் படிப்பதற்கு பெரியசாமித் தூரன் அவர்கள் பேருதவி செய்திருக்கிறார்கள் என்றுதான் சொல்லவேண்டும். ஆரம்பக் காலத்திலிருந்தே பாரதியாரின் படைப்புக்களில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர்கள் தூரன் அவர்கள். பாரதியாருடைய படைப்புக்கள் அனைத்தையும் படித்து, அவற்றைப் பலவாறாகத் தொகுத்து வெளியிட்டிருப்பதுடன், அவற்றைப் பற்றித் தம்முடைய குறிப்பையும், கருத்துக்களையும் அவ்வப்பொழுது வெளியிடவே செய்திருக்கிறார்கள். அத்தகைய பணியினுடைய ஒரு பகுதியாக இந்நூல் அமைந்திருக்கின்றது. தம் உடல்நிலை முழுமையான நலத்துடன் இல்லாதவிடத்துங்கூடத் தம்முடைய கவனத்தை இத்துறையில் அவர்கள் செலுத்தினார்கள் என்பதே, பாரதியாரிடத்தில் அவர்களுக்கு எத்தகைய ஈடுபாடு இருக்கிறது என்பதை உலகுக்கு உணர்த்தப் போதுமானது. அவர்களுடைய இந்த நூலை தமிழுலகம் பெரிதும் வரவேற்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆகவே, தமிழ் மக்கள் இதைப் படித்துப் பலன் பெற்று சமூகச் சீர்திருத்தத்திற்காக பாரதியார் வெளியிட்ட கருத்துக்களை ஆழ்ந்து கூர்ந்து கவனித்து, அவை நிரந்தரமான பலனைத் தரக்கூடியவை என்பதை உணர்ந்து, வெறுமனே பாரதியாரைப் புகழ்வதோடு நின்றுவிடாமல், அவருடைய கருத்துக்களைத் தங்களுடைய வாழ்க்கையில், அனுபவத்தில் கொண்டுவர முயல்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன். அப்படியே வேண்டிக்கொள்ளவும் செய்கிறேன்.

சென்னை,
24-7-1980

மு. மு. இஸ்மாயீல்

# முன்னுரை

"ஜாதி நூறு சொல்லுவாய் போ போ போ"

பாரதியாருடைய இடிக்குரல் முழங்குகிறது. எளிய சொற்களைக் கையாண்டு எவ்வளவு வலிமையுடையதாகக் கூறலாம் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. போ போ போ என்ற சொற்களிலே இடியைப்போலக் கர்ஜிக்கிறார் பாரதியார், உள்ளத்தில் ஒளியுண்டாயின் வாக்கினிலே ஒளியுண்டாகும் என்பதற்குச் சான்று பகர்வதைப் போல இந்தச் சொற்கள் அமைந்திருக்கின்றன.

பாரதியார் முதலில் ஒரு சமூக சீர்திருத்தவாதியாகத்தான் தமது வாழ்க்கையைத் தொடங்கினார். 'சக்கரவர்த்தினி' என்ற திங்கள் இதழ் இதற்குச் சான்று பகரும்.

ஆனால், மிக விரைவிலே அரசியல்வாதியாகவும் பரிணமித்து விட்டார் பாரதியார். 'இந்தியா' வார இதழ் இதற்கு நல்ல சான்று. இந்தியா வார இதழைக் கண்டு பிரிட்டிஷ் அரசாங்கமே நடுங்கிற்று. அதன் நெருப்பு மழையைத் தாங்க மாட்டாமல், இந்தியா வார இதழை எப்படியாவது தடை செய்ய வேண்டும் என்று பல பெருமுயற்சிகள் செய்தார்கள்.

பாரதியார் பாண்டிச்சேரிக்குத் தப்பி ஓடுவதென்றும், அங்கிருந்துகொண்டே தமது அரசியல் கொள்கைகளைப் பரப்பித் தமிழ் நாட்டைத் தட்டியெழுப்புவதென்றும், பாரதியாரின் குறிப்பிட்ட சில அன்பர்களால் தீர்மானம் ஆயிற்று.

பாண்டிச்சேரிக்கு சென்றதும்கூடத் தமது இந்தியா வார இதழைத் தொடர்ந்து நடத்த உதவ வில்லையாயினும் ஒருவகையில் நன்மை பயந்தது. அங்குதான் வீரவிளக்கான வ. வே. சு. ஐயர் அவர்களையும், மஹான் அரவிந்தரையும் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. மேலும், பிரெஞ்சு நாடாகிய பாண்டிச்சேரியிலே பல முற்போக்கான எண்ணங்களைத் தருவதற்கும் அது உதவிற்று என்று கூறலாம். பிரெஞ்சு நாடு என்றுமே முற்போக்கு உடையது. சுதந்திரம் சமத்துவம் சகோதரத்துவம்

என்று முதன் முதலில் முழங்கியதும் பிரெஞ்சு நாடேயாகும். ஆகவே, அந்த எண்ணங்களை நிதானமாக நின்று ஆலோசிக்கப் பாண்டிச்சேரி வாசம் வழிவகுத்தது என்று கூறலாம்.

ஆனல் பாரதியாரின் மதிநுட்பமே இதற்கு முதற்காரண மாக இருந்தது என்றும் திண்ணமாகக் கூறலாம். பாண்டிச்சேரி யில் உள்ள மக்கள் எல்லாருமே பெண்விடுதலை, சமூகசீர்திருத் தம் என்ற முற்போக்குக் கருத்துக்களைக் கொண்டிருந்ததாகச் சொல்ல முடியாது. 1905 ஆம் ஆண்டு நடந்த காசி காங்கி ரஸுக்கு பாரதியார் செல்லுகின்றார். அப்பொழுது சகோதரி நிவேதிதை அன்னையைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைக்கின்றது.

சகோதரி நிவேதிதா தேவி ஓர் உணர்ச்சிமிக்க மேல்நாட்டு மாதராவார். அவர் தமது குருவாக சுவாமி விவேகானந்தரை ஏற்றுக்கொண்டு சேவை புரிந்தவர்.

பாரதியாரிடம் 'உனக்கு திருமணமாகிவிட்டதா?' என்று கேட்கிறார் சகோதரி நிவேதிதா.

பாரதியார் தமக்குத் திருமணமாகிவிட்டதென்றும், ஒரு குழந்தையும் இருப்பதாகத் தெரிவிக்கின்றார்.

பிறகு ஏன் காங்கிரஸுக்கு மனைவியை அழைத்து வரவில்லை யென்று நிவேதிதை கடிந்து கொள்கிறார். இந்த நாட்டிலே பாதிப்பேர் பெண்கள் அறியாமையில் மூழ்கிக்கிடக்க உனக்கு ஸ்வராஜ்யம் வந்துவிடுமா? முதலில் அவர்கள் முன்னேற்றத் தையே நாடு; இந்த நாடு அப்பொழுதுதான் விமோசனம் அடையும் என்று ஆவேசம் வந்தவர் போல அந்த மாது பேசு கின்றார். பாரதியாரின் வாழ்க்கை அன்னை நிவேதிதை சந்திப் புக்குப் பிறகு முற்றிலும் மாறிவிட்டது என்று சொல்லலாம். அவருடைய சந்திப்பிற்கு எவ்வளவு மதிப்பு வைத்திருந்தார் என்பது, அன்னை நிவேதிதைக்குத் தமது முதல் இரண்டு நூல் களையும் அர்ப்பணம் செய்ததிலிருந்தே கண்டுகொள்ளலாம்.

எந்த ஆண்டில் பாரதியார் தமது முற்போக்கான சமூக சீர்திருத்தங்களை வெளியிடுகின்றார் என்பதைக் கவனிக்கும் போதுதான் அவர் பெருமை நன்கு வெளியாகும். 1914, 1915-ல் நமது பெண்களின் நிலைமை எவ்வாறு இருந்தது என்று சற்றுச்

சிந்தித்துப் பாருங்கள். பாரதியார் அக்காலப் பெண்களின் நிலைமையைப்பற்றி 'பாரதி நினைவுகள்' என்ற திருமதி யதுகிரி அம்மாள் அவர்கள் தமது நூலிலே சுவையாக எழுதியிருக்கின்றார். பெண்கள் கூட்டமொன்றில் பேசியதாகச் சுதேசமித்திரனில் வெளிவருகின்றது. உடனே திருவல்லிக்கேணியில் பூகம்பம் ஏற்பட்டுவிட்டதாம்! பெண்களாவது பேசவாவது? அப்படிப் பேசினாலும், அதைப் பத்திரிகைகளில் வெளியிடலாமா என்று பெண்களின் கூட்டத்தில் ஒரே அதிர்ச்சியாம்! திருமதி யதுகிரியம்மாளின் பாட்டியாரும், இன்னும் சில பெண்களும் சேர்ந்துகொண்டு, உடனே பாண்டிச்சேரிக்குப் புறப்பட்டு விட்டார்கள். எப்படிப் பேசலாம் என்பதை ஒரே முழக்கமாக முழக்கிவிட்டு, இனிமேல் பேசுவதில்லை என்ற உத்தரவாதத்தை பெற்றுக்கொண்டுதான் திரும்பினார்களாம். அதன் பிறகுதான் திருவல்லிக்கேணியில் தலைகாட்ட முடிந்ததாம்! பெண்கள் கல்லூரிக்குச் சென்று படிக்க விரும்பிய காலத்திலும் அதே எதிர்ப்புத்தானாம். இப்படிப்பட்ட சூழ்நிலையிலேதான்,

> **ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்**
> **றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்**
> **வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டிவைப் போமென்ற**
> **விந்தைமனிதர் தலைகவிழ்ந்தார்**

என்றும்,

> **பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்**
> **பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்**
> **எட்டுமறிவினில் ஆணுக்கிங்கே பெண்**
> **இளைப்பில்லை காணென்று கும்மியடி.**

என்றும் துணிந்து பாடுகின்றார்.

பாண்டிச்சேரியில் திரு. கனகலிங்கத்திற்குப் பூணூல் போட்ட செய்கையும் நாம் அறிவோம். எல்லாருக்கும் பூணூல் போட்டுவிட்டால் ஜாதி வேறுபாடே அற்றுப் போகும் என்பது பாரதியார் கருத்து.

ஹரிஜனங்களை நாம் மிகமிகத் தாழ்த்திவிட்டோம், அதன் பலன்களைத்தான் இன்று அனுபவித்து 'வருகின்றோம் என்பது பாரதியாருடைய அசைக்க முடியாத நம்பிக்கை. இதுபற்றி,

பஞ்சகோண கோட்டை என்ற ஒரு சிறு கதையும் எழுதி விளக்குகின்றார்.

அதாவது பஞ்சகோண கோட்டை என்று ஒரு கோட்டை இருந்ததாம். அந்தக் கோட்டைக்கு நாற்புறமும் கல்லால் எடுத்த வலிமையான கோட்டைச் சுவர் உண்டு. ஆனால் அதன் ஐந்தாவது கோணமாகிய கோட்டை அப்படிக் கற்சுவரால் எழுப்பப்படவில்லை, அது மண் சுவரால் ஆனது. பகைவர் எதிர்த்து வந்தபோது நான்கு புறமும் கற்சுவரால் எழுப்பப் பட்டிருந்ததால் அதை ஒன்றும் அசைக்க முடியவில்லை. ஆனால் ஐந்தாவது கோட்டைச் சுவர் மண்ணால் கட்டப்பட்டதென்று எப்படியோ பகைவன் ஒருவன் அறிந்துகொண்டான். பகைவர் மண் சுவரைத் தாக்கினர். கோட்டை வீழ்ச்சியுற்றது. நாம் அடிமைப்பட்டதற்கு அதுவே முக்கிய காரணம் என்று அந்தக் கதையால் எழுதியுள்ளார். அந்த மண்சுவர்தான் பஞ்சமர். அவரை ஆதரிக்காவிட்டால், நமது நாடு விடுதலை பெறாது என்ற கருத்தில் பாரதியார் அந்தச் சிறு கதையை எழுதியுள்ளார். தொழில் செய்ய வேண்டும் சோம்பலாக இருக்கக்கூடாது என்று பாரதியார் பலவிடங்களில் சொல்லியிருக்கிறார். 'இரும் பைக் காய்ச்சி உருக்கிடுவீரே, யந்திரங்கள் வகுத்திடுவீரே' என்ற கவிதையில் அது நன்கு வெளிப்படுகிறது.

'எந்தத் தொழிலும் இழிவில்லை. சோம்பல்தான் இழிவு தரும்' என்பது பாரதி வாக்கு. 1917-ம் ஆண்டு அக்டோபர் 26-ந் தேதி எழுதிய 'உள்ளருத்த விளக்கம்' என்ற கட்டுரையில் 'கை' என்பதற்குத் தெலுங்கில் 'செய்' என்று பெயர். க,ச மாறுதல் இயல்பு. 'கை' என்ற சொல்லுக்கே 'செய்' என்று பொருள். தொழில் செய்யாமல் இருக்கும் கையை நெருப்பிலே வை, கரியாவது கிடைக்கும் என்றர்த்தம் என்கிறார். இதிலிருந்து தொழிலின் உயர்வை எவ்வாறு மதிக்கிறார் பாரதியார் என்பதை அறியலாம்.

கண்ணன் பாட்டு மிகப் புகழ்பெற்றது. கண்ணனைத் தந்தை யாகவும், தாயாகவும், காதலனாகவும், காதலியாகவும் என்று இப்படிப்பட்ட பலவகை வடிவிலே வைத்துப் பாரதியார் பாடி யிருக்கின்றார்,

'கண்ணன் என் தந்தை' என்ற கவிதையிலே,

**துறந்த நடைகளுடையான்;—உங்கள்**
**சூனியப் பொய்ச் சாத்திரங்கள் கண்டு நகைப்பான்**

என்ற வரிகள், நமது கவனத்துக்குரியனவாகும்.

இடையிலே நமக்கு நேர்ந்துவிட்டதை எண்ணி அவர் இவ்வாறு பாடுகின்றார். பொய்ச் சாத்திரங்கள் மலிந்து விட்டன என்றும், அவற்றைச் சீர்திருத்துவது அவசியம் என்றும் பாரதியார் கூறுகின்றார்.

**'மேலவர் கீழவரென்றே—வெறும்**
**வேடத்திற் பிறப்பினில் விதிப்பனவாம்**
**போலிச் சுவடியை யெல்லாம்—இன்று**
**பொசுக்கி விட்டா லெவர்க்கும் நன்மை யுண்டென்பான்**

என்று, அதே கவிதையில் பாரதியார் பாடுகின்றார்.

1916-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 9-ந் தேதி 'விதி' என்று ஒரு கருத்துச் செறிவு மிக்க கட்டுரை ஒன்று எழுதியிருக்கின்றார்.

அதிலே விதியை மூன்று வகையாகப் பிரித்து வைத்துள்ளார். அவையாவன: தெய்வ விதி, சாஸ்திர விதி, நாட்டு விதி என்பனவாம்.

இந்த மூன்றிலே, தெய்வ விதியை மாற்ற முடியாது என்றும், 'சாஸ்திரம் மனிதனால் எழுதப்பட்டது; ஆதலால் இன்னும் நிறைவு பெறவில்லை. தெய்வ விதிகளைக் கூடியவரை பின்பற்றியே சாஸ்திரங்களை எழுத முயற்சி செய்திருக்கிறார்கள். ஆனால் காலதேச வர்த்தமானங்கள் மாறுபடுகின்றன. தெய்வ விதிகளைப் பற்றிய புதிய விதிகள் வழங்கப்படுகின்றன. அப்பொழுது சாஸ்திர விதிகளை மாற்றுதல் அவசியமாகிறது. என்றும் "நாட்டு விதி" என்பது அர்த்த, நீதி சாஸ்திரங்களின் விதி. இதனைத் தற்காலத்தோர் அரசியல் விதியென்று சொல்லுகிறார்கள். அதுவும் சாஸ்திர விதியோடு சேர்ந்ததுதான். ஆனால் மற்ற இலக்கணம் முதலிய சாஸ்திரங்களின் விதிகளைக் காட்டிலும் அரசியல் விதிகள் மிகவும் விரைவுடன் மாறுபடுவதால் இதனைத் தனியாக ஒரு பகுதியாக்கும்படி நேரிட்டது. ஏனவே, தெய்வ விதிக்குப் பரிபூரணமாக உட்பட்டு சாஸ்திர

விதிகளையும் நாட்டு விதிகளையும் மேன்மேலும் புத்திசாலித்தனமாகச் சீர்திருத்திக் கொண்டு வந்தால் மனுஷ்ய ஜாதிக்கு க்ஷேமமுண்டாகும்'' என்றும் கூறுகின்றார்.

பாரதியார் தொழிலாளர் நலன்களையும் மிகப்பரிவுடனும் அனுதாபத்துடனும் நோக்குகிறார். இதைத் தொழிலாளர் என்ற பகுதியிலே காணலாம். அவர் கூறுகின்ற முக்கியமான எண்ணங்களாவன: "தொழிலாளரிடம் பொது ஜனங்களும் முதலாளிகளும், மிகுந்த மதிப்புச் செலுத்தும்படி ஏற்பாடு செய்வதே இந்த வேலையில் முதற்படியாம். "தம்முடைய காரியத்தைச் செய்ய வேண்டியதே தொழிலாளியின் ஆத்மாவுக்கு ஈசனால் விதிக்கப்பட்ட புருஷார்த்தம்'' என்று முதலாளிகளில் பலர் நினைக்கிறார்கள். யந்திரங்களைப் போலவே இவர்கள் மனிதரையும் மதிக்கிறார்கள். பொதுவாக ஏழைகளிடம் செல்வருக்கு உள்ள அவமதிப்பு அளவிடும் தரம் அன்று. இவ்விதமான எண்ணம் நம்முடைய தேசத்திலும் செல்வர்களிடத்தும் மிகுதியாக காணப்படுகின்றது. இவ்வெண்ணத்தை உடனே மாற்றித் தொழிலாளிகளையும் மற்ற ஏழைகளையும் நாம் ஸாதாரண மனிதராக நடத்த வேண்டும்' என்று தெளிவாகக் கூறுகின்றார்.

இந்த இடத்திலே செல்வர்கள் கடமை என்ன என்பது பற்றி 'புதிய உயிர்' என்ற கட்டுரையிலே (17 மார்ச்சு 1916) மிக அழுத்தமாகக் கூறியுள்ளார். நமது நாட்டுச் செல்வர்கள் இவ்விஷயத்தைக் கவனிக்க வேண்டும். உன் சொத்தை எல்லாருக்கும் பங்கிட்டுக் கொடுத்து விட்டு, நீ ஏழையாக வேண்டுமென்று நான் சொல்லவில்லை. கைத்தொழில்களும் வியாபாரங்களும் ஏற்படுத்தி அக்கம் பக்கத்தாரிடம் சரியானபடி வேலை வாங்கிக்கொண்டு சரியானபடி கூலி கொடு உனக்கும் நல்ல லாபம் கிடைக்கும். கூலி குறையக் கொடுக்கும் முதலாளி லக்ஷ்மி தேவியைக் காலால் உதைக்கிறான். அவன் மகன் தரித்திரத்திலும் நோயிலும் வருந்துவான். ஸகல ஜனங்களுக்கும் வயிறு நிறைய உணவு கிடைக்காத ஊரில் வாழும் செல்வரெல்லாம் திருடர். அங்கே குருக்களெல்லாம் பொய்யர்

பண்டிதரெல்லாம் மூடர். மேன்மை நிலை பெற வேண்டுமானால் கைத்தொழில்கள் பெருகும்படி செய்யவேண்டும். சாத்யமில்லை யென்று சொல்லி ஏங்குவதிலே பயனில்லை. எப்படியேனும் எப்படியேனும் செல்வத்தை வளர்க்க வேண்டும்.

'வெள்ளிப் பனிவரையின் மீதுலவுவோம்' என்று ஓர் அற்புத மான கவிதை பாதியார் எழுதியிருக்கின்றார். பாரதேசத்தின் ஒருமைப்பாட்டு உணர்ச்சியை இங்கே மிக வலியுறுத்திக் கூறுகின்றார். ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு; நம்மில் ஒற்றுமை நீங்கில் அனைவருக்கும் தாழ்வு என்பதை வேதவாக்காகக் கொள்ள வேண்டும். அதுதான் பாரதத்தை உய்விக்கும் தாரக மந்திரம். இதை உரை நடையிலும் எப்படி வலியுறுத்தியிருக் கிறார் என்று பாருங்கள்.

"நமது வேதம், நமது சாஸ்திரம், நமது ஜனக்கட்டு நமது பாஷைகள், நமது கவிதை, நமது சிற்பம், நமது சங்கீதம் நமது நாட்டியம், நமது தொழில் முறைகள், நமது கோபுரங்கள், நமது மண்டபங்கள், நமது குடிசைகள்— இவையனைத்துக்கும் பொதுப் பெயர் 'ஆர்யஸம்பத்து'. காளிதாசன் செய்த சாகுந்தல நாடகம், ஹிந்திபாஷையிலே துளசிதாஸர் செய்திருக்கும் ராமாயணம், கம்பராமாயணம் சிலப்பதிகாரம், திருக்குறள், ஆண்டாள் திருமொழி—இவை யனைத்துக்கும் பொதுப்பெயராவது ஆர்ய ஸம்பத்து. தஞ்சாவூர் கோயில், திருமலை நாய்க்கர் மஹால், தியாகையர் கிர்த்தனங்கள் எல்லோராவிலுள்ள குகைக் கோயில், ஆக்ராவிலுள்ள தாஜ்மஹால், சரபசாஸ்திரியின் புல்லாங்குழல் இவையனைத் துக்கும் பொதுப் பெயர் ஆர்ய ஸம்பத்து. எனவே ஆர்ய ஸம்பத்தாவது ஹிந்துஸ்தானத்தின் நாகரிகம்.

பாரத மக்களையெல்லாம் ஒரே ஜாதியாகப் பிணைத்து விட்டால் இந்த ஒருமைப்பாடு கை கூடிவிடும். ஆனால் இதற்கும் சாதிக்குழப்பங்கள் என்று பெரிதும் விக்னமாகத் தோன்றிப் பேரிடைஞ்சல்கள் விளைவிக்கின்றன. பாரதியார் எதிர்பார்த்தது போலப் பாரததேசத்து மக்கள் எல்லோரும் ஒரேஜாதி என்றாகி விட்டால் மிக நல்லது. ஆனால் இங்குள்ள நிலைமையில் இவ்வாறு

புரட்சிகரமான மாறுதல்களை எதிர்பார்ப்பது முடியாது. ஜாதி என்ற ஒரு எண்ணம் எவ்வாறு ஆழமாகவோ ஊன்றியிருக்கின்றது என்பதைக் கீழ்வரும் பாரதியாரின் வாக்கிலே அறியலாம். ஜாதிக்குழப்பம் என்ற கட்டுரையில் அவர் கூறுகின்றார்: ஒரு யானையைக் கொடுமையாக அடித்ததை பாரதியார் கவனிக்கிறார். ஏன் அப்படி அடிக்கிறாய் என்று கேட்டதற்கு அவன் கூறுகின்றான். 'இந்த யானை கீழ்ஜாதி யானை, யானைகளில் ப்ரம்ம, க்ஷத்திரிய, 'வைசிய, சூத்திரர் என நான்கு முக்கிய ஜாதிகளுண்டு. ஒவ்வொரு ஜாதியிலும் கிளை வகுப்புக்களிருக்கின்றன. அவற்றுள் இது சூத்திர ஜாதியைச் சேர்ந்த யானை. மனிதர்களில் சூத்திரர்களுக்குள் ஈழுவர் என்ற ஜாதியர் இருக்கிறார்களே, அதே மாதிரி இந்த யானை வீரன் வகுப்பைச் சேர்ந்தது..... ' இங்ஙனம் அந்த மாவுத்தன் நீண்ட கதை சொன்னான்.

நான் இந்த விஷயத்தை இங்கு எடுத்துச் சொல்லியதின் நோக்கம் யாதெனில், நம்மவர்கள் மனத்தில் இந்த ஜாதிக் கொள்கை எத்தனை ஆழமாகப் பதிந்திருக்கிறது என்பதை உணர்த்தும் பொருட்டேயாம். யானையை எடுத்தால், அதில் ப்ரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர். குதிரையிலும் அப்படியே! வானத்திலுள்ள கிரஹங்களிலும் அதே மாதிரிபரம்ம க்ஷத்திரிய முதலிய ஜாதி பேதங்கள் இரத்தினங்களிலும் அப்படியே!

இங்ஙனம் ஜாதிக் கொள்கை வேரூன்றிக் கிடக்கும் நாட்டில், மனுஷ்ய ஸ்வதந்திரம், ஸஹோதரத்வம் என்னுங் கொள்கைகளை நிலை நிறுத்துவதென்றால் அது ஸாதாரண வேலையா? கொஞ்ச ஜாதியா? அவற்றில் உட்பிரிவுகள் கொஞ்சமா? பறை பதினெட்டாம்! நுளை நூற்றெட்டாம்! அதாவது பறையர்களுக்குள்ளே 18 பகுதிகளும் நுளையர்களில் 108 பகுதிகளும் இருக்கின்றனவாம். மேலும், பறையன், பள்ளன் சக்கிலியன் எல்லோரும் வெவ்வேறு ஜாதிகள், ஒன்றுக்கொன்று பந்திபோஜனம் கிடையாது. பெண் கொடுக்கல் வாங்கல் கிடையாது. கேலி; கேலி, பெருங்கேலி.

இந்த மனநிலையில்தான். பாரதியாரின் அரிய நண்பராகிய குவளையூர் கிருஷ்ணமாசாரியார் என்பவர், ஒரு சமயம்

கேட்டாராம்: "ஐயா, பாரதியாரே! உங்கள் கொள்கைகள், கருத்துக்கள் எல்லாம் எனக்குத் திருப்திகரமாக இருக்கின்றன. தாங்கள் சொல்வதை நான் ஒப்புக்கொள்வதும், நான் சொல் வதைத் தாங்கள் ஒப்புக் கொள்வதும் நமக்குள் இயல்பாக இருக்கிறது. ஜனங்களில் பலர் நாம் தப்பிதமான கொள்கை களை வைத்திருப்பதாகச் சொல்கிறார்களே அதற்கென்ன சொல் கிறீர்கள்?" என்று கேட்டாராம்.

அதற்கு பாரதியார், "நாம் இப்பொழுது சொல்வனவற்றை யெல்லாம் நானூறு வருஷங்கள் கழித்து உலகம் ஒப்புக் கொள்ளும். நாம் இன்னும் நானூறு வருஷங்களுக்குப் பின்னாலே தோன்ற வேண்டியவர்கள்; முன்னாலேயே தோன்றி விட்டோம். அதற்கென்ன செய்வது?" என்று பதிலளித்தாராம் பாரதியார்.

விடுதலை கிடைத்தவுடன், சமூகசீர்த்திருத்தங்களெல்லாம் உடனே நடைபெற்று விடும் என்று நானும் எதிர்பார்த்து ஏமாந்தேன். இதை நினைக்கும் போது தமிழ் மக்களின் மேல் எனக்கு அடங்காத கோபம் உண்டாகிறது.

ஆனால், தமிழ் மக்கள் விவேகமும் சிறந்த மதிநுட்பமும் வாய்ந்தவர்கள். அவர்களின் மேல் எனக்கு மிகுந்த நம்பிக்கை உண்டு. பாரதியார் சொல்லியது போல நானூறு ஆண்டுகள் காத்திருக்க வேண்டாம். ஒரு நாற்பது ஆண்டுகளிலே சமூக சீர்திருத்தங்களுள் எல்லாம், துருப்பிடித்தனவற்றை வீசி யெறிந்து விட்டு நல்லதைக் கைக் கொள்வார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன்.

"தமிழா தெய்வத்தை நம்பு. பயப்படாதே. உனக்கு நல்ல காலம் வருகின்றது" என்ற பாரதியார் வாக்கை வேதவாக் காகக் கொள்வோம். ஆயிரம் ஆண்டுகளாகப் பயனற்றுப்போன கொள்கைகளை தைரியமாக உதறித்தள்ளுவோம். பயனுள்ள வற்றை கெட்டியாகப் பிடித்துக் கொள்வோமாக. வாழ்க தமிழன்; வாழிய வாழிய!

**ம. ப. பெரியசாமித் தூரன்**

# பொருளடக்கம்

## பாரதியார் கவிதைகள்



## பாரதியார் உரைநடை

# பாரதியாரும் சமூகமும்

## பாரதியார், சமூக சீர்திருத்தம் பற்றி எழுதிய சில கவிதைகள்

*குறிப்பு : *பாரதியார் சமூக சீர்திருத்த வாதியாகவே தமது எழுத்துப் பணியைத் தொடங்குகிறார். ஆனால் மிக விரைவிலே, அவர் விடுதலைப் போராட்டத்திற்கு பிரம்மாஸ் திரம் போன்ற வலிமையையும் நெஞ்சுறுதியையும் தரக் கூடிய தேசீயப் பாடல்களை எழுதும் ஆற்றல்மிக்க கவிஞ ராகவும், உரைநடை எழுத்தாளராகவும், பேச்சாளராக வும் மலர்கிறார். அவ்வாறு மலர்ந்த போதும் சமூக சீர்திருத்தத்தைப் பற்றிக் கவிதையும் கட்டுரையும் எழுதிக் கொண்டுதானிருந்தார். இந்தப் பணி பாரதியாரது இறுதி மூச்சு உள்ள வரை நடைபெற்றதை இந்த நூலின் வாயிலாக அறியலாம்.*

*இந்த நூல் வரிசையிலே சில கவிதைகளை அவற்றின் பொருத்தம் நோக்கி ஒன்றிற்கு மேற்பட்ட இடங்களில் சேர்க்க வேண்டியதைத் தவிர்க்க முடியவில்லை. உரை*

---

*குறிப்பு என்று வருவதெல்லாம், தொகுப்பாசிரியர் சிந்தனைகளும் விளக்கங்களும் ஆகும்; பாரதியார் எழுதியவை அல்ல.

நடைப் பகுதியிலும் இதே நிலைதான். ஏதாவது ஒரு கோணத்தில் பார்க்கின்றபோது அதற்கு ஏற்ற கவிதை உரைநடைப் பகுதிகளை ஒரே நூலில் கொடுப்பதுதான், படிப்போருக்குப் பாரதியாரின் சிந்தனைகளை அறிந்து கொள்ளப் பெரிதும் உதவியாக இருக்கும். காந்தியடிகளின் சிந்தனைகளை 'மாணவருக்கு', 'பெண்களுக்கு' என்ற தலைப்பு களில் தனித்தனி நூலாக வெளியிட்டபோதும், இப்படிப் பட்ட அடிப்படை நோக்கத்தைக் கொண்டே வெளி யிட்டார்கள். அம்முறையே இங்கும் பின்பற்றப் படுவதை வாசகர்கள் எளிதில் உணரலாம்.

ஆனால், கூடுமானவரை ஒரு கவிதை அல்லது கட்டுரை யைப் பல இடங்களில் சேர்ப்பதைத் தவிர்த்திருக்கிறேன்.

ஒரு சிலவற்றின் முக்கியத்தை எண்ணிப் பார்த்து அவற்றை மட்டும் இரண்டாம் முறையாகவும் வெளியிட வேண்டியதாயிற்று. அவற்றை விட்டால் அந்தத் துறை குறையுடையதாகவே காட்சியளிக்கும்.

பாரதியார் உள்ளம் மிகப்பல பட்டைகள் தீட்டப் பெற்ற வைரமணி போன்றது. எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், அதில் ஒரு தனிப்பட்ட ஒளி அற்புதமாக வெளிப்படுவதைக் காணலாம். சங்கீதம் முதலிய கலைகள், தமிழகம், பாரததேசம், உலகம் இவற்றைப் பற்றி உரமூட்டக்கூடிய தெள்ளிய சிந்தனைகள், பெண் விடுதலை போன்ற பல்வேறு பிரச்சினைகள், சமூக சீர்திருத்தம், இவ்வாறு எத்தனை எத்தனை கோணங்களுக்கு பாரதியாரின் பரந்த உள்ளம் ஒளிகொடுத்திருக்கிறது!

இவற்றையெல்லாம் தொகுத்து நோக்கும் போது தான் மஹாகவித்வம் என்ற மேதை உள்ளம் வியக்கத்தக்க தரிசனம் தருகின்றது.

இவ்வரிசையில் முதல் நான்கு நூல்களுக்கு விரிவான முகவுரை மட்டும் எழுதினேன். ஆனால் பலர் விரும்பிக் கேட்டுக்கொண்டவாறு இவ்வரிசை ஐந்தாம் நூலிலிருந்து ஒவ்வொரு கவிதை அல்லது கட்டுரைக்கும் குறிப்பாக என்னுடைய கருத்தையும், ஆய்வுரை அல்லது ஏற்ற வேறு பல செய்திகளையும் எழுதி வெளியிடுகின்றேன். இப் புதிய முறையையே இந்நூலிலும் இனிவருகின்ற நூல்களிலும் பின்பற்றுவேன். எனது எண்ணங்களை ஆங்காங்குக் கூறுவதற்கு ஒரு வாய்ப்பாகவும் இம்முறை அமைந்துள்ளதை நான் பெரிதும் விரும்புகின்றேன்.

வாசகர்களுக்கு ஒரு வேண்டுகோள். குறிப்பு ஆங்காங்கே இருப்பதால் முன்னுரையைப் படிக்கவேண்டிய தில்லை யென்று தயவுசெய்து எண்ணாதீர்கள். அதிலும்இந்த வரிசைபற்றிய சில முக்கியமான தகவல்களும், சமூகச் சீர்திருத்தம் பற்றிய பாரதியாரின் முடிவான சிந்தனைத் தொகுப்பும் இருக்கின்றன. ஆகவே எதையும் ஒதுக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். ஒவ்வொரு பாரதி நூலுக்கும் முன்னுரையோடு அணிந்துரை யிருப்பதையும் காணலாம். அறிஞர் பலரின் சீரிய சிந்தனை களும் அதில் இடம் பெற்றுள்ளன.

## எனது தாய்நாட்டின் முன்னாட் பெருமையும் இந்நாட் சிறுமையும்

[குறிப்பு : இப்பாடல் 11 ஏப்ரல் 1906-இல் சுதேச மித்திரனில் வெளியாயிற்று. 'இன்னும் வரும்' என்று இப் பாடலின் இறுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது. திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு அவர்களும், தமது பத்திரிகையாகிய அமிர்தகுண போதினியில், "சென்று போன நாட்கள்"

என்ற தலைப்பின்கீழ் பாரதியாரைப்பற்றிச் சிலகுறிப்புக
தொடர்ச்சியாக எழுதி வந்தபோது, "பாரதியார் மே
கண்ட மகுடமிட்டுத் தொடர்ச்சியாகப் பாடல்கள் எழுத்
தொடங்கினார்" என்று கூறியிருக்கிறார். இதுதான் பார
யார் மித்திரனில் எழுதிய முதற்பாடல் என்றும், இ
பாரதியாருடைய கவிதைத் தொகுப்பில் சேர்க்கப்ப
வில்லை என்றும் அவரே குறிப்பிட்டிருக்கிறார்.

ஆனால் இது மித்திரனில் வெளியான முதற் பாட
அன்று என்பதை எனது நூலாகிய பாரதி தமிழில் எடுத்து
காட்டியுள்ளேன். இப்பாடலுக்கு முன்பே 15 செப்டம்ப
1905இல் "வங்க வாழ்த்துக் கவிகள்" என்ற தலைப்பி
ஒரு கவிதை மித்திரனில் வெளியாகியுள்ளது. இதே போ
வேறு நான்கு கவிதைகளும் 1906 ஏப்ரல் 11க்கு முன்
மித்திரனில் வந்திருக்கின்றது. அவையாவன:

(1) 28-12-1905 பங்கிம் சந்திர சட்டர்ஜியின் வந்
மாதர கீதத்தின் முதல் மொழிபெயர்ப்பு. இது முதலி
சக்கரவர்த்தினி என்ற மாதஇதழில் நவம்பரில் வெளியாகி
பிறகு 28-12-1905 இல் மித்திரனில் வந்திருக்கிறது.

(2) 29-1-1906—"வேல்ஸ் இளவரசருக்கு, பர
கண்டத் தாய் நல்வரவு கூறுதல்" என்ற ஆசிரியப்பா

(3) 24-2-1906— "வந்தே மாதரம்" என்ற கவி
இது வந்தே மாதரம் என்போம் என்று தொடங்கும் புக
பெற்ற பாடல் அன்று. "ஆரியம் என்ற பெரும் பெ
கொண்ட" என்று தொடங்கும் வேறொரு பாடலாகு
வந்தே மாதரம் என்ற மந்திரத்தின் பெருமை
விளக்குவது இது. இரண்டு பகுதியாக வெளிவந்தது
இரண்டாம் பகுதி 27-1-1906-இல்,

(4) 24-2-1906—"என்னே கொடுமை" என்ற தலைப்பில் வெளியானது, இரண்டு ரஜபுத்திரர்கள் செய்த அற்புதமான துப்பாக்கி வித்தைகளைப் பாராட்டி எழுதிய கவிதை. முன் காலத்தில் அர்ஜுனன் காட்டிய வில் திறமையெல்லாம் மறந்து போய், இன்று,

வீமன் திறலு மவற்கிளைய
  விஜயன் திறலும் விளங்கிநின்ற
சேம மணிப்பூந் தடநாட்டில்
  சிறிய புழுக்கள் தோன்றி வெறுங்
காம நுகர்தல் இரந்துண்ணல்
  கடையாம் வாழ்க்கை வாழ்ந்து பினர்
ஈமம் புகுதல் இவை புரிவார்
  என்னே கொடுமை ஈங்கிதுவே

என்று மகாகவி அங்கலாய்க்கிறார். துப்பாக்கி வித்தைகளைப் பார்த்ததும் உள்ளத்திலே இந்த எண்ணங்கள் எழுந்தனவாம்.

தாய் நாட்டின் பழம் பெருமையையும் இன்றைய சிறுமையையும் 11-4-1906-இல் கவிதையாக வடித்துள்ளார். ஆகவே இப்பாடல் ஐந்தாவதாக மித்திரனில் வெளி வந்ததாகும். வங்க வாழ்த்துக் கவியே சுதேசமித்திரனில் வெளியான முதற் பாடலாகக் காண்கிறது. "தனிமை இரக்கம்" போன்ற கவிதைகள் முன்பே வெளியாகி யிருந்தாலும், மித்திரனில் வெளிவந்தவற்றையே இங்கு நான் குறிப்பிடுகிறேன். அந்த ஆராய்ச்சி இங்கு வேண்டு வதில்லை.

திரு. இராமாநுஜலு நாயுடு அவர்கள், தொடர்ச்சியாக இந்த மகுடமிட்டு எழுதினார் என்று குறிப்பிட்டிருந்தாலும், இப்பகுதி தவிர வேறொன்றும் எனக்குக் கண்டுபிடிக்க இயல வில்லை.

# 2. கண்ணிகள்

*11-4-1906*

*புன்னகையு மின்னிசையும் எங்கொளித்துப் போயினவோ*
*இன்னலொடு கண்ணீ ரிருப்பாகி விட்டனவே!*
*ஆணெலாம் பெண்ணாய் அரிவையரெ லாம் விலங்காய்*
*மாணெலாம் பாழாகி மங்கிவிட்ட திந்நாடே!*
*ஆரியர்கள் வாழ்ந்துவரும் அற்புதநா டென்பது போய்ப்*
*பூரியர்கள் வாழும் புலைத்தேச மாயினதே!*
*வீமாதி வீரர் விளிந்தெங்கு போயினரோ!*
*ஏமாறி நிற்கு மிழிஞர்களிங் குள்ளாரே!*
*வேத வுபநிடத மெய்நூல்க ளெல்லாம்போய்*
*பேதைக் கதைகள் பிதற்றுவரிந் நாட்டினிலே!*
*ஆதி மறைக்கீதம் அரிவையர்கள் சொன்னது போய்*
*வீதி பெருக்கும் விலையடிமை யாகினரே!*
*செந்தேனும் பாலும் தெவிட்டிநின்ற நாட்டினிலே*
*வந்தே தீப்பஞ்ச மரபாகி விட்டதுவே!*
*மாமுனிவர் தோன்றி மணமுயர்ந்த நாட்டினிலே*
*காமுகரும் பொய்யடிமைக் கள்வர்களும் சூழ்ந்தனரே!*
*பொன்னு மணியுமிகப் பொங்கிநின்ற விந்நாட்டில்*
*அன்னமின்றி நாளு மழிவார்க ளெத்தனைபேர்!*

குறிப்பு : சமூக சீர்திருத்தம் கூறவந்த பாரதியார் இன்று உயிரோடு இருக்கவேண்டும். வர்ட்ஸ் வொர்த் என்ற ஆங்கிலக் கவிஞன், மில்ட்டன் என்ற மகாகவியை பற்றி ஒரு சானெட் எழுதியுள்ளார். அதிலே, மில்ட்டனை விளித்து, "நீஇந்தச் சமயம் உயிரோடு இருக்க வேண்டும் என்று விரும்புகிறார். அதையே நானும் விரும்புகிறேன் விடுதலை பெற்ற இன்றைய இந்திய நாட்டிலும், காமுகரு

பொய்யடிமைக் கள்வர்களும் மலிந்திருப்பதையும், இப் பொல்லா இழிவுணர்ச்சிகளைத் தங்கள் எழுத்து மூலமும், பொழுது போக்கு என்ற நொண்டிச் சாக்கு மூலமும் வளர்க்க முயலுவதையும் கண்டால், அவர் உள்ளம் எவ்வாறு பொங்கி எழுமோ அறியேன். இடியின் மாபெருங் கர்ஜனையோடு இப்போக்கை அவர் சாடுவார் என்பது மட்டும் திண்ணம்.

## 3. வந்தே மாதரம்

(தாயுமானவர் ஆனந்தக் களிப்பு மெட்டு)

1907 ஆம் ஆண்டு.

குறிப்பு: பாரதியார் முதன் முதலாக நூல்வடிவத்திலே வெளியிட்ட மூன்று பாடல்களில் இதுவும் ஒன்று. தாயுமானவரின் ஆனந்தக் களிப்பு இவரைக் கவர்ந்துள்ளது. "ஆதிசிவன் பெற்று விட்டான்", "தாயின் மணிக்கொடி பாரீர்" என்பனபோன்ற பாடல்கள் இந்த மெட்டிலேயே அமைந்துள்ளன. ஆனால் சங்கர சங்கர சம்பு என்ற சந்த முள்ள தாயுமானவர் பாடலுக்கும் இதற்கும் எத்துணை வேறு பாடு! தாயுமானவர் பாடல் ஒரு வகையிலே சிறந்தது என்பதை மறுக்க முடியாது. பாரதியார் அந்த எளிய ஆனந்தக் களிப்பின் சந்தத்தையே எடுத்துக் கொண்டு, வேறு வகையான உணர்ச்சிகள் தெறிக்கும்படி, பாகப் பாடுகின்றார். "முப்பது கோடியும் வாழ்வோம்— வீழில், முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்" என்பன போன்ற வரிகள் சிங்கத்தின் கர்ஜனையோடு ஒலிக்கின்றன.

உலக இன்பங்களை வெறுத்து ஒதுக்கிச் சிவானந்தப் பேற்றை அருளும் மோனகுருவைப் பற்றிப் புகழ்ந்து

பேசிய தாயுமானவர் ஆனந்தக் களிப்புச் சந்தத்தையே கொண்டு, உலக வாழ்வு இன்பம் பெற வழிகாட்டிய பாரதியாரின் திறனை என்னென்று சொல்வது!

ஆகவேதான், தேசபக்த சிகாமணியாகிய ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாச ஐயங்கார், பாரதியாருடைய பாட்டைப் பற்றிப் பேச வந்த போது, "அதிவேகமாகப் பறக்கும் திறத்தாலும், இறகுகளின் வர்ண வனப்பினாலும், உள்ளம் உருக்கும் பாட்டின் இனிமையாலும் செருக்குற்ற ஒரு பறவைக்கு இவர் பாட்டை ஒப்பிடலாம்" என்று வியந்து போற்றுகிறார்.

பங்கிம் சந்த்ரபாபு இயற்றிய புகழ்பெற்ற வந்தே மாதர கீதத்திற்கு 1905-இல் பாரதியார் மொழி பெயர்ப்பாக ஒரு பாடல் இயற்றினார். அது இசையோடு பாடுவதற்கு ஏற்ற தாக இல்லையென்று அதே ஆண்டில் சந்தத்துடன் கூடிய புதிய மொழி பெயர்ப்பும் செய்கிறார். ஆனந்த மடம் என்ற தமது நாவலில் பங்கிம் பாபுவின் கீதம் முதலில் வெளி யானபோது அதில் ஏழுகோடி என்று வங்க மக்களையே குறிக்கின்றது. ஆனால் ஏழுகோடியை அன்று கண்ட மக்கள் தொகையின் படி முப்பதுகோடி என்று இந்தியா முழு வதையும் குறிப்பதாக மாற்றியிருக்கிறார்.

இரண்டு மொழிபெயர்ப்புகளும் பாடுவதற்கு எளிமை யாக இல்லை என்று கருதித்தான் போலும், "வந்தே மாதர மென்போம்" என்ற இப் பாடலைத் தம் சொந்த முறையில் இயற்றித் தமிழுக்குப் பெருமை சேர்த்துள்ளார். முப்பது கோடியும் வாழ்வோம் என்னும் போது முப்பது என்பதில் மலைபோன்ற அழுத்தம் விழுந்திருக்கிறது. ஜாதி சமயம் முதலியவற்றால் பிரிக்க முடியாத வலிமையும் இதில் தொனிக்கின்றது. ஒளிபெற்ற கவிதைகளில் இது ஒன்றாகும்.

விடுதலை இயக்க காலத்தில் இப்பாடல் ஒலிக்காத அரசியல் கூட்டம் இல்லையென்றே கூறவேண்டும்.

முதன்முதலில் வெளியான இப்பாடலில் கீழ்க்கண்ட சரணமும் சேர்ந்திருந்தது.

தேவி நம் பாரத பூமி—எங்கள்
தீமைகள் யாவையுந் தீர்த்தருள் செய்வாள்
ஆவியுடல் பொருள் மூன்றும்—அந்த
அன்னைபொற் றாளினுக் கர்ப்பிதமாக்கு. (வந்தே)

1919இல் பரலி—நெல்லையப்பர் வெளியிட்ட "நாட்டுப் பாட்டில்" இச் சரணம் இடம் பெறவில்லை. முதற்பதிப்பில் காணப்பெறாத "புல்லடிமைத் தொழில் பேணி" என்று, ஆறுவது சரணமாகக் காண்கிறது. பாரதியாரே இந்த மாறுதல்களைச் செய்தாரா என்பதை ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டும்.

பாரத தேசத்தில் பிறந்தவர் அனைவரும் ஒன்று என்பதையும், ஒற்றுமையே வாழ்வுதரும் என்பதையும் இப்பாடல் பெரிதும் வலியுறுத்துகின்றது.

## பல்லவி

வந்தே மாதர மென்போம்—எங்கள்
மாநிலத் தாயை வணங்குது மென்போம். (வந்தே)

## சரணங்கள்

1. ஜாதி மதங்களைப் பாரோம்—உயர்
ஜன்மமித் தேசத்தி லெய்தின ராயின்
வேதிய ராயினும் ஒன்றே—அன்றி
வேறு குலத்தின ராயினு மொன்றே. (வந்தே)

2. ஈனப் பறையறகளேனும்—அவர்
எம்முடன் வாழ்ந்திங் கிருப்பவ ரன்றோ?
சீனத்த ராய்விடு வாரோ?—பிற
தேசத்தர் போற்பல தீங்கிழைப் பாரோ?

(வந்தே)

3. ஆயிர முண்டிங்கு ஜாதி—எனில்
அன்னியர் வந்து புகலென்ன நீதி?—ஓர்
தாயின் வயிற்றிற் பிறந்தோர்—தம்முட்
சண்டை செய்தாலும் சகோதர ரன்றோ?

(வந்தே)

4. ஒன்று பட்டாலுண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கி லனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும்?

(வந்தே)

5. எப்பதம் வாய்த்திடு மேனும்—நம்மில்
யாவர்க்கு மந்த நிலை பொதுவாகும்;
முப்பது கோடியும் வாழ்வோம்—வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்.

(வந்தே)

6. புல்லடிமைத் தொழில் பேணிப்—பண்டு
போயின நாட்களுக் கினி மனம்நாணித்
தொல்லை யிகழ்ச்சிகள் தீர—இந்தத்
தொண்டு நிலைமையைத் தூவென்று தள்ளி.

(வந்தே)

# 4. நடிப்புச் சுதேசிகள்

குறிப்பு : இப்பாடல் 1907 வாக்கில் எழுதப் பட்டுள்ளது. கூட்டத்தில் கூடி வாய்கிழியப் பேசிவிட்டுப் பிறகு நாட்டத்திற் கொள்ளாதவர்களுக்கு நல்ல சூடு கொடுக்கிறார். இன்றும் இந்த நிலை மாறவில்லை. மாறியிருந் தால் நாடு எவ்வளவோ ஓங்கி வளர்ந்திருக்கும். வந்தே மாதரம் என்று முழங்குவதால் மட்டும் எல்லாம் பலித்து விடாது. மேடையேறிப் பேசுவதில் ஒரு பங்கையாவது செய்கையில் நடத்திக் காண்பிக்க முழுமனதுடனும், ஆர்வத்துடனும் முன்வரவேண்டும். ஆசார திருத்த மஹா சபை என்ற கட்டுரையிலும், சுமார் 13 ஆண்டுகளுக்குப் பிறகு பாரதியார் இதே கருத்தை வெளியிடுகின்றார் என்பதை நோக்க வேண்டும். பழித்துக் கூறியாவது மக்களைத் திருத்த முடியுமா என்று, கவிஞருடைய உள்ளத்தில் கொழுந்து விடும் ஆசையை இப்பாடலில் காண்கிறோம்.

## பழித்தறிவுறுத்தல்

### கிளிக் கண்ணிகள்

1. நெஞ்சி லுரமு மின்றி
நேர்மைத் திறமு மின்றி
வஞ்சனை சொல்வா ரடீ—கிளியே
வாய்ச் சொல்லில் வீரரடீ.

2. கூட்டத்திற் கூடி நின்று
கூவிப் பிதற்ற லன்றி
நாட்டத்திற் கொள்ளாரடீ—கிளியே
நாளில் மறப் பாரடீ,

3. சொந்த அரசும் புவிச்
சுகங்களும் மாண்புகளும்
அந்தகர்க் குண்டாகுமோ ?—கிளியே
அலிகளுக் கின்ப முண்டோ ?

4. கண்க ளிரண் டிருந்தும்
காணுந் திறமை யற்ற
பெண்களின் கூட்டமடீ—கிளியே
பேசிப் பய னென்னடீ?

5. யந்திர சாலை யென்பர்
எங்கள் துணிக ளென்பர்
மந்திரத்தாலே யெங்கும்—கிளியே
மாங்கனி வீழ்வதுண்டோ?

6. உப்பென்றும் சீனி யென்றும்
உள்நாட்டுச் சேலை யென்றும்
செப்பித் திரிவாரடீ—கிளியே
செய்வ தறியாரடீ.

7. தேவியர் மான மென்றும்
தெய்வத்தின் பக்தி யென்றும்
நாவினுற் சொல்வதல்லால்—கிளியே
நம்புத லற்றாரடீ.

8. மாதரைக் கற்பழித்து
வன்கண்மை பிறர் செய்யப்
பேதைகள் போலுயிரைக்—கிளியே
பேணி யிருந்தாரடீ.

9. தேவி கோயிலிற் சென்று
தீமை பிறர்கள் செய்ய
ஆவி பெரிதென் றெண்ணிக்—கிளியே
அஞ்சிக் கிடந்தாரடீ.

10. அச்சமும் பேடிமையும்
அடிமைச் சிறுமதியும்
உச்சத்திற் கொண்டாரடீ—கிளியே
ஊமைச் சனங்களடீ.

11. ஊக்கமும் உளவலியும்
உண்மையிற் பற்றுமில்லா
மாக்களுக் கோர் கணமும்—கிளியே
வாழத் தகுதியுண்டோ?

12. மானம் சிறிதென் றெண்ணி
வாழ்வு பெரிதென் றெண்ணும்
ஈனர்க் குலகந்தனில்—கிளியே
இருக்க நிலைமை யுண்டோ?

13. சிந்தையிற் கள்விரும்பிச்
சிவ சிவ வென்பதுபோல்
வந்தே மாதர மென்பர்—கிளியே
மனதி லதனைக் கொள்ளார்.

14. பழமை பழமை யென்று
பாவனை பேசலன்றிப்
பழமை யிருந்தநிலை—கிளியே
பாமர ரேதறிவார்?

15. நாட்டி லவமதிப்பும்
நாணின்றி யிழிசெல்வத்
தேட்டில் விருப்புங்கொண்டே—கிளியே
சிறுமை யடை வாரடீ.

16. சொந்தச் சகோதரர்கள்
துன்பத்திற் சாதல் கண்டும்
சிந்தை யிரங்காரடீ—கிளியே
செம்மை மறந்தாரடீ.

17. பஞ்சத்தும் நோய்களிலும்
பாரதர் புழுக்கள் போல்
துஞ்சத்தம் கண்ணுற் கண்டும்—கிளியே
சோம்பிக் கிடப்பாரடீ.

18. தாயைக் கொல்லும் பஞ்சத்தைத்
தடுக்க முயற்சி யுறார்
வாயைத் திறந்து சும்மா—கிளியே
வந்தே மாதர மென்பார்.

## 5. தொண்டு செய்யும் அடிமை

குறிப்பு : ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற பாரத வாஸிக்கு, ஆங்கிலேய உத்தியோகஸ்தன் கூறுவதாக இப் பாடல் அமைந்துள்ளது. நந்தனர் சரித்திரக் கீர்த்தனையில் வந்துள்ள பாடல்கள் பாரதியாரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. மேலும், அக்காலத்தில் இப்பாடல்கள் கதாகாலட்சேபம் செய்பவர்களால் அடிக்கடி பாடப் பட்டிருக்க வேண்டும்.

இப்பாடல்களின் வர்ணமெட்டைப் பயன்படுத்தினல் மக்கள் மனதில் நன்கு பதியும் என்ற நோக்கமும் கவிஞருக்கு இருந்திருக்கவேண்டும். அதனால்தான் "ஓய் திலகரே நம்ம ஜாதிக்கடுக்குமோ", "அன்னியர் தமக் கடிமையல்லவே," "நாமென்ன செய்வோம் துணைவரே" முதலான பாடல்களை நந்தனர் கீர்த்தனைப் பாடல்களின் வர்ணமெட்டில் இயற்றியிருக்கிறார்.

எளிய சொல், எளிய சந்தம், எளிய வர்ணமெட்டு— இவற்றைக் கையாண்டு புதிய கவிதைகள் படைக்க வேண்டும் என்று விரும்பிய கவிஞர், தாமே ஆனந்தக்

[illegible]ப்பு, நொண்டிச் சிந்து, காவடிச்சிந்து முதலிய யாப்பு முறைகளுள் மிகச்சிறந்த பாடல்கள் இயற்றியுள்ளார்.

"மாடு தின்னும் புலையா—உனக்கு மார்கழித் திருநாளோ" என்ற நந்தனார் கீர்த்தனை வர்ண மெட்டில் இப்பாடலை பாரதியார் உருவாக்கியுள்ளார். ஆனால், அந்தப் பாடலுக்கும் இதற்கும் உணர்ச்சி வேகத்திலே மிகப்பெரிய வேறுபாடு காணப்படுவதை எளிதில் உணர்ந்து கொள்ளலாம். அடிமை, அடிமை என்று மீண்டும் மீண்டும் வருவது நமக்குச் சவுக்கடி கொடுப்பதுபோல இருக்கிறது. உள்ளத்திலே சம்மட்டி கொண்டு அடிப்பது போலவும் உணர்ச்சி ஏற்படுகிறது.

"நெஞ்சில் உரமுமின்றி," என்று தொடங்கும் கிளிக் கண்ணிகள் ஒரு வகையில் பாரத மக்களைப் பழித்து அறிவுறுத்துகிறது என்றால், இது இடிபோல இடித்து அறிவுறுத்துகிறது, அன்னியன் வாயிலாக எனக் கூறலாம்.

தொண்டு செய்யும் அடிமை!—உனக்குச்
சுதந்திர நினைவோடா?
பண்டுகண்ட துண்டோ?—அதற்குப்
பாத்திர மாவாயோ? (தொண்டு)

ஜாதிச் சண்டை போச்சோ?—உங்கள்
சமயச் சண்டை போச்சோ?
நீதி சொல்ல வந்தாய்!—கண்முன்
நிற்கொ ணாது போடா! (தொண்டு)

அச்சம் நீங்கினாயோ?—அடிமை!
ஆண்மை தாங்கினாயோ?
பிச்சைவாங்கிப் பிழைக்கும்—ஆசை
பேணுத லொழித்தாயோ? (தொண்டு)

4. கப்ப லேறுவாயோ!—அடிமை!
கடலைத் தாண்டுவாயோ?
குப்பை விரும்பும் நாய்க்கே—அடிமை!
கொற்றத் தவிசுமுண்டோ? (தொண்டு

5. ஒற்றுமை பயின்றயோ?—அடிமை!
உடம்பில் வலிமையுண்டோ?
வெற்றுரை பேசாதே!—அடிமை!
வீரியம் அறிவாயோ? (தொண்டு

6. சேர்ந்து வாழுவீரோ—உங்கள் ?
சிறுமைக் குணங்கள் போச்சோ?
சோர்ந்து வீழ்தல்போச்சோ—உங்கள்
சோம்பரைத் துடைத்தீரோ? (தொண்டு

7. வெள்ளை நிறத்தைக் கண்டால்—பதறி
வெருவலை ஒழித்தாயோ?
உள்ளது சொல்வேன்கேள்—சுதந்திரம்
உனக்கில்லை மறந்திடடா! (தொண்டு

8. நாடு காப்பதற்கே—உனக்கு
ஞானம் சிறிதுமுண்டோ ?
வீடுகாக்கப் போடா!—அடிமை!
வேலைசெய்யப் போடா! (தொண்டு

9. சேனை நடத்துவாயோ!—தொழும்புகள்
செய்திட விரும்பாயோ?
ஈனமான தொழிலே—உங்களுக்கு
இசைவதாகும் போடா! (தொண்டு

# 6. முரசு

குறிப்பு : முரசும், பாப்பாப் பாட்டும் சூரியன் ந்திரன் போலே. இரண்டும் இரண்டு விலைமதிக்க முடியாத மாணிக்கங்கள். பாப்பாப் பாட்டைக் குழந்தைப் பருவத்திலேயே பாலோடு புகட்டி விட வேண்டும். இளமைப் பருவத்திலே ஒவ்வொரு ஆணும், ஒவ்வொரு பெண்ணும் கற்று மனதில் பதிய வைத்துக் கொள்ள வேண்டிய கவிதை முரசு.

இவை இரண்டுமே வாழ்க்கையை அமைத்துக் கொள்வதற்குப் போதும். கம்பராமாயணம், திருக்குறள் இவையும் சேர்ந்துவிட்டால் முழு ஆண்மகனாக, முழுப் பெண்மணியாக வாழ வழிகாட்டும். வேறென்ன வேண்டும்?

பாரதியாரின் பாடல்களைப் புரிந்து கொள்ளுவது எளிது. இக்காலத்துக்கு வேண்டிய மனப்பாங்கை உண்டாக்கிக் கொள்ள அவை உதவும்.

முரசு என்ற கவிதையில் பல வகையான உயர் எண்ணங்களை வடித்துக் கொடுக்கிறார். அதனால்தான் இதை எந்தத் தொகுப்பிலும் விட முடியாதிருக்கின்றது. இங்கு சமூக சீர்திருத்தம் பற்றிய கருத்துக்களை மனதில் கொண்டு அதற்குச் சார்பான சில பகுதிகள் மட்டும் தரப்படுகின்றது.

வெற்றி எட்டுத் திக்கும் எட்டக் கொட்டு முரசே!
வேதம் என்றும் வாழ்கஎன்று கொட்டு முரசே!
நெற்றி யொற்றைக் கண்ணனோடே நிர்த்தனம் செய்தாள்
நித்த சக்தி வாழ்க என்று கொட்டு முரசே!

1. ஊருக்கு நல்லது சொல்வேன்—எனக்
   குண்மை தெரிந்தது சொல்வேன்;
   சீருக் கெல்லாம் முதலாகும்—ஒரு
   தெய்வம் துணைசெய்ய வேண்டும்.

2. வேத மறிந்தவன் பார்ப்பான்,—பல
   வித்தை தெரிந்தவன் பார்ப்பான்;
   நீதி நிலைதவ றாமல்—தண்ட
   நேமங்கள் செய்பவன் நாய்க்கன்.

3. பண்டங்கள் விற்பவன் செட்டி—பிறர்
   பட்டினி தீர்ப்பவன் செட்டி;
   தொண்டரென் றோர்வகுப் பில்லை,—தொழில்
   சோம்பலைப் போல்இழி வில்லை.

4. நாலு வகுப்பும்இங் கொன்றே,—இந்த
   நான்கினில் ஒன்று குறைந்தால்,
   வேலை தவறிச் சிதைந்தே—செத்து
   வீழ்ந்திடும் மானிடச் சாதி.

5. ஒற்றைக் குடும்பந் தனிலே—பொருள்
   ஓங்க வளர்ப்பவன் தந்தை;
   மற்றைக் கருமங்கள் செய்தே—மனை
   வாழ்ந்திடச் செய்பவள் அன்னை;

6. ஏவல்கள் செய்பவர் மக்கள்;—இவர்
   யாவரும் ஓர்குலம் அன்றோ?
   மேவி அனைவரும் ஒன்றாய்—நல்ல
   வீடு நடத்துதல் கண்டோம்.

7. சாதிப் பிரிவுகள் சொல்லி—அதில்
   தாழ்வென்றும் மேலென்றும் கொள்வார்,
   நீதிப் பிரிவுகள் செய்வார்—அங்கு
   நித்தமும் சண்டைகள் செய்வார்.

சாதிக் கொடுமைகள் வேண்டாம்;—அன்பு
தன்னில் செழித்திடும் வையம்;
ஆதர வுற்றிங்கு வாழ்வோம்;—தொழில்
ஆயிரம் மாண்புறச் செய்வோம்.

பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடும் ஈசன்;
மண்ணுக் குள்ளே சிலமூடர்—நல்ல
மாத ரறிவைக் கெடுத்தார்.

10. கண்கள் இரண்டினில் ஒன்றைக்—குத்திக்
காட்சி கெடுத்திட லாமோ?
பெண்க ளறிவை வளர்த்தால்—வையம்
பேதமை யற்றிடுங் காணீர்.

## 7. புதுமைப் பெண் பாடல்கள்

*1914—15*

குறிப்பு : இப் பாடல்களை எழுதி வெளியிட்ட தேதி திட்டமாகக் காண மேலும் ஆராய்ச்சி செய்யவேண்டும். பாரதியார் எழுத்திலே இவ்வாறு கால வரிசை கண்டு பிடிப்பது மிக அவசியம். அப்பொழுதுதான் கவிஞருடைய எழுத்து, எண்ண முதிர்ச்சிகளை நன்கு கண்டு திறனாய்வு செய்ய இயலும். பாரதி தமிழ் என்ற தலைப்பிலே நான் வெளியிட்டுள்ள பாரதியார் கவிதைகள், கதைகள், கட்டுரை கள் முதலியவை வெளிவந்த தேதியை, 1927—இல் அரிதில் முயன்று தேடித் தொகுத்து வைத்துள்ளதை, அந்நூலைப் படித்த பலரும் அறிவார்கள். இன்னும் பல கவிதைகள் வெளியான தேதிகளை அக்காலத்தில் நான் மிகவும் அருமை யாகப் பேணிவந்த பாரதி பிரசுராலயத்தார் வெளியிட்ட

பாரதி கவிதைகள் என்ற பெருந் தொகுப்பில் குறித்து வைத்திருந்தேன். அந்த நூலை யாரோ எடுத்துச் சென்றவர் திருப்பித் தரவே இல்லை. எவ்வளவோ விலை மதிக்க முடியாத தனத்தை இழந்து விட்டேனே என்று இன்றும் நான் வருந்துவதை யார் அறிவார்கள்?

இக் கவிதைகளை எழுதிய காலத்தை உத்தேசமாகவே தந்துள்ளேன். ஆனால் பாரதியார் பெண்ணுரிமை, பெண் விடுதலை பற்றி, 1906 ஆம் ஆண்டிலே அவர் சக்கரவர்த்தினி என்ற மாசிகைக்கு ஆசிரியராக இருந்த காலத்திலேயே முற்போக்கான எண்ணங்களைத் தெளிவாகக் கொண்டிருந்தார் என்பதில் ஐயமில்லை.

பழங்கால மனிதராக மண்டயம் ஸ்ரீநிவாசாசாரியார் தோற்றமளித்தார். பெண் விடுதலை பற்றியும் அவர் தீவிர வாதியாக இருக்கவில்லை. அவருடைய ஆதரவிலே பாரதியார் இந்தியா வார இதழை நடத்தினாலும், தமது சொந்த எண்ணங்களை, அன்று பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளப்படாத கருத்துக்களைப் பாரதியார் வெளியிடத் தயங்கவில்லை. ஆசார்யார் அவர்களும் பாரதியாருடைய எண்ணங்களுக்கு மிகவும் மதிப்புக் கொடுத்து வந்திருக்கிறார் என்பதை அறியும் போது, அவர் எவ்வளவு பெரியவர் என்பது நன்கு விளங்குகிறது.

''ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வோம்'' என்ற பாரதியாருடைய ஆசை இன்றும் முற்றிலும் நிறை வேறவில்லை என்பது சிந்தனைக் குரியது. ஆண்களெல்லாம் மேல்நாட்டு நாகரிகத்திலே மயங்கிக் கிடந்த காலத்தில் நமது பண்பாட்டைக் காப்பாற்றியவர்கள் நமது பெண்மணிகளே ஆவர். அவர்களுக்கு இன்னும் சம நியாயம் வழங்கப் படாமலிருப்பது கண்டனத்திற்குரியது.

"இந்த நாட்டு இளம் விதலைகளின் கண்ணீர்தான் நாட்டை அடிமைப் படுத்தியது. இது உங்களுக்குத் தெரியவில்லையா?" என்று பெருந்துறவியாகிய சுவாமி விவேகாநந்தரே இடித்துக் கூறுகிறார். ஆணுக்கு அறுபது வயதானாலும் மனைவி இறந்துவிட்டால் வேறு மணம் செய்து கொள்கிறான். இருபது வயது இளம் விதவைக்கு இவ்வுரிமை கிடையாது. இப்படி எத்தனையோ நமது சமூகத்திலே குறைபாடுகள். ஆணுக்கு ஒரு நீதி; பெண்ணுக்கு ஒரு நீதி என்பது மறைந்து மண்ணாக வேண்டும். அன்றுதான் பாரத அன்னையின் துயரம் மறையும்.

இப்பாடல்கள் பாரதியும் பெண்ணுரிமையும் என்ற எனது ஐந்தாவது நூலில் வந்திருந்தாலும், இவற்றின் முக்கியத்தை உணர்ந்து இங்கும் தரப்படுகின்றன.

இப்பாடல்கள் பெண்விடுதலைக்கு மஹாகவி வழங்கிய மாக்ன கார்ட்டா உரிமைச் சாசன மாகும்.

## பெண்கள் விடுதலைக் கும்மி

*1914—15*

### காப்பு

பெண்கள் விடுதலை பெற்ற மகிழ்ச்சிகள்
பேசிக் களிப்பொடு நாம் பாடக்
கண்களிலே யொளி போல வுயிரில்
கலந்தொளிர் தெய்வநற் காப்பாமே.

1. கும்மியடி தமிழ் நாடு முழுதுங்
குலுங்கிடக் கைகொட்டிக் கும்மியடி
நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோ மென்று கும்மியடி. (கும்மி)

2. ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்
றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்
வீட்க்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போ மென்ற
விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார். (கும்மி

3. மாட்டை யடித்து வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டு வந்தே
வீட்டினி லெம்மிடங் காட்ட வந்தாரதை
வெட்டி விட்டோ மென்று கும்மியடி. (கும்மி

4. நல்ல விலைகொண்டு நாயை விற்பாரந்த
நாயிடம் யோசனை கேட்ப துண்டோ?
கொல்லத் துணிவின்றி நம்மையு மந்நிலை
கூட்டி வைத்தார் பழி கூட்டி விட்டார். (கும்

5. கற்பு நிலையென்று சொல்லவந் தாரிரு
கக்ஷிக்கு மஃது பொதுவில் வைப்போம்
வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக்கொடுக்கும்
வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம். (கும்ம

6. பட்டங்களாள்வதுஞ் சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டு மறிவினி லாணுக்கிங்கே பெண்
இளைப்பில்லை காணென்று கும்மியடி, (கும்மி

7. வேதம் படைக்கவும் நீதிகள் செய்யவும்
வேண்டி வந்தோ மென்று கும்மியடி
சாதம் படைக்கவுஞ் செய்திடுவோந் தெய்வச்
சாதி படைக்கவுஞ் செய்திடுவோம். (கும்

8. காத லொருவனைக் கைப்பிடித்தே யவன்
காரியம் யாவினுங் கைகொடுத்து
மாதர றங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சி பெறச்செய்து வாழ்வமடி. (கும்

27

# புதுமைப் பெண்

*1914—15*

1. போற்றி போற்றியோ ராயிரம் போற்றி! நின்
பொன்ன டிக்குப்பல் லாயிரம் போற்றி காண்!
சேற்றிலே புதிதாக முளைத்ததோர்
செய்ய தாமரைத் தேமலர் போலொளி
தோற்றி நின்றனை பாரத நாட்டிலே
துன்ப நீக்குஞ் சுதந்திர பேரிகை
சாற்றி வந்தனை மாதரசே யெங்கள்
சாதி செய்த தவப்பயன் வாழி நீ!

2. மாதர்க் குண்டு சுதந்திர மென்றுநின்
வண்மலர்த்திரு வாயின் மொழிந்தசொல்
நாதந் தானது நாரதர் வீணையோ?
நம்பிரான் கண்ணன் வேய்ங்குழ லின்பமோ?
வேதம் பொன்னுருக் கன்னிகை யாகியே
மேன்மை செய்தெமைக் காத்திடச் சொல்வதோ?
சாதல் மூத்தல் கெடுக்கு மமிழ்தமோ?
தையல் வாழ்கபல் லாண்டுபல் லாண்டிங்கே!

3. அறிவு கொண்ட மனித வுயிர்களை
அடிமை யாக்க முயல்பவர் பித்தராம்
நெறிகள் யாவினு மேம்பட்டு மானிடர்
நேர்மை கொண்டுயர் தேவர்க ளாதற்கே
சிறிய தொண்டுகள் தீர்த்தடி மைச்சுருள்
தீயி லிட்டுப் பொசுக்கிட வேண்டுமாம்
நறிய பொன்மலர் மென்சிறு வாயினால்
நங்கை கூறு நவீனங்கள் கேட்டிரோ!

4. ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கியிவ் வையந் தழைக்குமாம்
பூணு நல்லறத் தோடிங்கு பெண்ணுருப்
போந்து நிற்பது தாய்சிவ சக்தியாம்
நாணு மச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்
ஞான நல்லறம் வீர சுதந்திரம்
பேணு நற்குடிப் பெண்ணின் குணங்களாம்
பெண்மைத் தெய்வத்தின் பேச்சுகள் கேட்டிரோ!

5. நிலத்தின் தன்மை பயிர்க்குள தாகுமாம்
நீசத் தொண்டு மடமையுங் கொண்டதாய்
தலத்தில் மாண்புயர் மக்களைப் பெற்றிடல்
சாலவே யரி தாவதொர் செய்தியாம்
குலத்து மாதர்க்குக் கற்பியல் பாகுமாம்
கொடுமை செய்து மறிவை யழித்துமந்
நலத்தைக் காக்க விரும்புதல் தீமையாம்
நங்கை கூறும் வியப்புகள் கேட்டிரோ!

6. புதுமைப் பெண்ணிவள் சொற்களுஞ் செய்கையும்
பொய்மை கொண்ட கலிக்குப் புதிதன்றிச்
சதுமறைப்படி மாந்த ரிருந்த நாள்
தன்னிலே பொதுவான வழக்க மாம்
மதுரத் தேமொழி மங்கைய ருண்மைதேர்
மாதவப் பெரி யோருட னொப்புற்றே
முதுமைக் காலத்தில் வேதங்கள் பேசிய
முறைமை மாறிடக் கேடு விளைந்ததாம்.

7. நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கு மஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கு மிருப்பதால்
செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்

அமிழ்ந்து பேரிரு ளாமறி யாமையில்
அவல மெய்திக் கலையின்றி வாழ்வதை
உமிழ்ந்து தள்ளுதல் பெண்ணற மாகுமாம்
உலக கன்னி யுரைப்பது கேட்டிரோ!

உலக வாழ்க்கையி னுட்பங்கள் தேரவும்
ஓது பற்பல நூல்வகை கற்கவும்
இலகு சீருடை நாற்றிசை நாடுகள்
யாவுஞ் சென்று புதுமை கொணர்ந்திங்கே
திலக வாணுத லார்நங்கள் பாரத
தேசமோங்க உழைத்திடல் வேண்டுமாம்
விலகி வீட்டிலோர் பொந்தில் வளர்வதை
வீரப் பெண்கள் விரைவி லொழிப்பராம்.

சாத்திரங்கள் பல பல கற்பராம்
சவுரியங்கள் பல பல செய்வராம்
மூத்த பொய்கள் யாவு மழிப்பராம்
மூடக் கட்டுக்கள் யாவுந் தகர்ப்பராம்
காத்து மானிடர் செய்கை யனைத்தையும்
கடவுளர்க் கினிதாகச் சமைப்ப ராம்
ஏத்தி யாண்மக்கள் போற்றிட வாழ்வராம்
இளைய நங்கையி னெண்ணங்கள் கேட்டிரோ!

போற்றி, போற்றி, ஜயஜய போற்றியிப்
புதுமைப் பெண்ணொளி வாழிபல் லாண்டிங்கே
மாற்றி வையம் புதுமை யுறச்செய்து
மனிதர் தம்மை யமரர்க ளாக்கவே
ஆற்றல் கொண்ட பராசக்தி யன்னைநல்
லருளினு லொரு கன்னிகை யாகியே
தேற்றி யுண்மைகள் கூறிட வந்திட்டாள்
செல்வம் யாவினு மேற்செல்வ மெய்தினேம்.

# பெண்மை

22-9-1916க்குப்பின்

1. பெண்மை வாழ்கென்று கூத்திடு வோமடா
பெண்மை வெல்கென்று கூத்திடு வோமடா
தண்மை இன்பநற் புண்ணியஞ் சேர்ந்தன
தாயின் பேரும் ஸதியென்ற நாமமும்.

2. அன்பு வாழ்கென் றமைதியி லாடுவோம்
ஆசைக் காதலைக் கைகொட்டி வாழ்த்துவோம்
துன்பந் தீர்வது பெண்மையி னாலடா
சூரப் பிள்ளைகள் தாயென்று போற்றுவோம்.

3. வலிமை சேர்ப்பது தாய்முலைப் பாலடா
மானஞ் சேர்க்கும் மனைவியின் வார்த்தைகள்
கலி யழிப்பது பெண்க ளறமடா
கைகள் கோத்துக் களித்துநின் றாடுவோம்.

4. பெண் ணறத்தினை யாண்மக்கள் வீரந்தான்
பேணு மாயிற் பிறகொரு தாழ்வில்லை;
கண்ணைக் காக்கு மிரண்டிமை போலவே
காத லின்பத்தைக் காத்திடு வோமடா.

5. சக்தி யென்ற மதுவையுண் போமடா
தாளங் கொட்டித் திசைக ளதிரவே
ஒத்தி யல்வதொர் பாட்டுங் குழல்களும்
ஊர் வியக்கக் களித்துநின் றாடுவோம்.

6. உயிரைக் காக்கும் உயிரினைச் சேர்த்திடும்
உயிரினுக் குயிரா யின்ப மாகிடும்
உயிரி னும்மிந்தப் பெண்மை யினிதடா
ஊது கொம்புகள், ஆடு களிகொண்டே.

'போற்றி தாய்' என்று தோள்கொட்டி யாடுவீர்
புகழ்ச்சி கூறுவீர் காதற் கிளிகட்கே
நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணிடைப் பெண்ணொருத்தி பணியிலே.

'போற்றி' தாய் என்று தாளங்கள் கொட்டடா
'போற்றி தாய்' என்று பொற்குழ லூதடா
காற்றி லேறியவ் விண்ணையுஞ் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே.

அன்ன மூட்டிய தெய்வமணிக் கையின்
ஆணை காட்டில் அனலை விழுங்குவோம்
கன்னத் தேமுத்தங் கொண்டு களிப்பினும்
கையைத் தள்ளும் பொற்கைகளைப் பாடுவோம்.

## 8. விடுதலை

குறிப்பு : பெண் விடுதலைப் பாடல்களை மஹாகவி பெண்களுக்கு வழங்கிய மாக்னகார்ட்டா என்று கூறினேன். இது பெண்களுக்கும், தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் அவர் மனமார வழங்கிய உரிமைச் சாசனம் என்பதில் தடையேது?

எல்லாரும் சரிநிகர் சமானமாக இந் நாட்டிலே வாழ்வோம் என்று விடுதலை சங்கநாதம் முழக்குகிறார். உண்மையான விடுதலையும் அந்த நல்ல நாளிலேதான் கைவரப்பெறும் என்று தொனிக்கும்படியாக, இப் பாடல் அற்புதமாக அமைந்திருக்கிறது.

பாரத ஸமுதாயம், பாரத ஜனங்களின் தற்கால நிலைமை, நிகழ்கின்ற ஹிந்துஸ்தானமும் வருகின்ற

ஹிந்துஸ்தானமும் என்ற மூன்று கவிதை ரத்னங்க
முன்பே இந்தப் பாரதிவரிசையில் எடுத்தாளப் பெற்றிரு
கின்றன. ஆதலால் இங்கு அவற்றைப்பற்றி நினை
படுத்துவதோடு அமைகின்றேன்.

விடுதலை என்ற கவிதையும் முன்பே வந்துள்ள
என்றாலும், அதை இந்நூலிலும் சேர்க்க வேண்டும் என்
என் ஆசையைத் தடுக்க முடியவில்லை. இது போலவே
பெண் விடுதலையைப் பற்றிய பாடல்களுமாம்.

சிலவற்றை நம் மக்களுக்கு அடிக்கடி நினைவு படுத்
வேண்டியுள்ளது. மலைப்பாம்பைப் பற்றி மஹாக
கூறியதும் மனத்தில் கொள்ளவேண்டியதொன்று
என்ன செய்வது? கவிஞர் ஒரே தாவில் பாய்ந்து சிகரத்தை
எட்டிப் பிடித்து விடுகிறார். நாம் நத்தைவேகத்தில் ஊ
கிறோம்.

விடுதலை! விடுதலை! விடுதலை!

1. பறையருக்கு மிங்கு தீயர்
 புலையருக்கும் விடுதலை!
 பரவரோடு குறவருக்கு
 மறவருக்கும் விடுதலை;
 திறமைகொண்ட தீமையற்ற
 தொழில் புரிந்து யாவரும்
 தேர்ந்தகல்வி ஞானமெய்தி
 வாழ்வ மிந்த நாட்டிலே. (விடுதலை

2. ஏழையென்றும் அடிமையென்றும்
 எவனுமில்லை ஜாதியில்
 இழிவுகொண்ட மனிதரென்ப
 திந்தியாவில் இல்லையே;

வாழி கல்வி செல்வ மெய்தி
　　மனமகிழ்ந்து கூடியே
மனிதரியாரு மொரு நிகர்
　　ஸமானமாக வாழ்வமே. (விடுதலை)

மாதர் தம்மை யிழிவுசெய்யு
　　மடமையைக் கொளுத்துவோம்;
வையவாழ்வு தன்னிலெந்த
　　வகையினும் நமக்குளே
தாதரென்ற நிலைமை மாறி
　　ஆண்களொடு பெண்களும்
ஸரிநிகர் ஸமானமாக
　　வாழ்வமிந்த நாட்டிலே. (விடுதலை)

## 9. புதிய கோணங்கி

(அதாவது குடுகுடுப்பைக்காரன்)

[குறிப்பு : ஸ்வசரிதையும் பிறபாடல்களும் என்ற தாகுப்பில் இப் பாடல் சேர்க்கப்பட்டுள்ளது. ஆனால் தைக் கொத்து என்ற நூலில், புதிய கோணங்கி ஒரு தை போலவே உரைநடையும் பாடல் வரிகளுமாக மைந்துள்ளன. இதுவே முதலில் வந்தது. பிறகு பாடலை ட்டும் தொடர்ச்சியாகச் சேர்த்து வெளியிட்டுள்ளனர். திய கோணங்கி என்ற கதையே பாடலுக்கு விளக்கமும் சர்ந்து, சுவை கொடுப்பதை எளிதில் உணரலாம்.

வேதபுரத்தாருக்குச் சொல்லிய நல்ல குறி தமிழ் ாட்டிற்கும்,பாரதத்திற்குமே சொல்லிய நல்ல குறியாகும். துவே பாரதியாரின் ஆசையுமாகும்.

படித்தவன் சூதும் பாபமும் செய்யக் கூடாது சாத்திரம்வளருது; சாதி குறையுது. நேத்திரம் திறக்குது நியாயம் தெரியுது. வேறென்ன வேண்டும்?]

வேதபுரத்தில் ஒரு புது மாதிரிக் குடுகுடுப்பைக்காரன் புறப்பட்டிருக்கிறான். உடுக்கைத் தட்டுவதிலே மூப்பத்தைந்து தாள பேதங்களும், அவற்றிலே பல விந்நியாசங்களும் காட்டுகிறான். தாள விஷயத்திலே மஹா கெட்டிக்காரன். உடம்பு மேலே துணி மூட்டை சுமந்து கொண்டு போவதில்லை. நல்ல வெள்ளை வேஷ்டி உடுத்தி, வெள்ளை சட்டை போட்டுக்கொண்டிருக்கிறான். தலையிலே சிவப்புத் துணியால் வளைந்து வளைந்து பெரிய பாகை கட்டியிருக்கிறான். பாகையைப் பார்த்தால் நெல்லூர் அரிசி மூட்டையிலே பாதி மூட்டையைப் போலிருக்கிறது. நெற்றியிலே பெரிய குங்குமப் பொட்டு, மீசையும் கிருதாவுமாக மிகவும் விரிந்த பெரிய முகத்துக்கும் அவனுடைய சிவப்பு நிறத்துக்கும் அந்தக் குங்குமப் பொட்டு நன்றாகப் பொருந்தியிருக்கிறது. ஆள் நெட்டை; தடியன். காலிலே ஹைதராபாத் ஜோடு மாட்டியிருக்கிறான். நேற்றுக் காலையிலே, அவன் நம்முடைய வீதி வழியாக வந்தான். உடுக்கையிலே தாள விஸ்தாரம் நடக்கிறது. பெரிய மிருதங்கக்காரன் வேலை செய்வது போலச் செய்கிறான், நல்ல கெட்டிக்காரன். அவன் சொன்னான் : —

"குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு;
நல்ல காலம் வருகுது; நல்ல காலம் வருகுது;
ஜாதிகள் சேருது; சண்டைகள் தொலையுது;
சொல்லடி, சொல்லடி, சக்தி மாகாளி,
வேதபுரத்தாருக்கு நல்ல குறி சொல்லு;
தரித்திரம் போகுது, செல்வம் வருகுது;
படிப்பு வளருது; பாவம் தொலையுது;

படிச்சவன் சூதும் பாவமும் பண்ணினுல்
போவான், போவான்; ஐயோவென்று போவான்;
வேத புரத்திலே வியாபாரம் பெருகுது;
தொழில் பெருகுது; தொழிலாளி வாழ்வான்;
சாத்திரம் வளருது; சூத்திரந் தெரியுது;
மந்திரம் பெருகுது; தந்திரம் வளருது;
மந்திரமெல்லாம் வளருது; வளருது!
குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு,
சொல்லடி, சொல்லடீ, மலையாள பகவதீ.
அந்தரி, வீரி, சண்டிகை, சூலி;
குடுகுடு குடுகுடு"

இப்படி அவன் சொல்லிக்கொண்டு போவதை நான் மெத்தையிலிருந்து கேட்டேன். இதென்னடா புதுமை யாக இருக்கிறதென்று ஆச்சரியத்துடன் அவனை நிற்கச் சொன்னேன். நின்றுன். கீழே இறங்கிப் போய், அவனை ஸமீபத்தில் அழைத்து, "எந்த ஊர்" என்று கேட்டேன். சாமி, குடுகுடுக்காரனுக்கு ஊரேது, நாடேது? எங்கேயோ பிறந்தேன். எங்கேயோ வளர்ந்தேன். எங்கெல்லாமோ சுத்திக்கொண்டு வருகிறேன்" என்றுன். அப்போது நான் சொன்னேன் : —

"உன்னைப் பார்த்தால் புதுமையாகத் தெரிகிறது. சாதாரணக் கோணங்கிகளைப் போலில்லை. உன்னுடைய பூர்வோத்தரங்களைக் கூடிய வரையில் ஸவிஸ்தாரமாகச் சொல்லு. உனக்கு நேர்த்தியான சரிகை வேஷ்டி கொடுக்கிறேன்" என்றேன். அப்போது குடுகுடுக்காரன் சொல்லுகிறுன்: "சாமி, நான் பிறந்த இடந் தெரியாது. என்னுடைய தாயார் முகம் தெரியாது. என்னுடைய தகப்பனுருக்கு இதுவே தொழில். அவர் தெற்குப் பக்கத்தைச் சேர்ந்தவர். 'ஒன்பது கம்பளத்தார்' என்ற ஜாதி. எனக்குப்

பத்து வயதாக இருக்கும் போது தஞ்சாவூருக்கு என் தகப்பனுர் என்னை அழைத்துக் கொண்டு போனுர். அங்கே வைசூரி கண்டு செத்துப்போய் விட்டார். பிறகு நான இதே தொழிலில் ஜீவனம் செய்து கொண்டு பலதேசங்கள சுற்றி ஹைதராபாத்துக்குப் போய்ச் சேர்ந்தேன் அப்போது எனக்கு வயது இருபதிருக்கும். அங்கே ஜான்ஸன் என்ற துரை வந்திருந்தான். நல்ல மனுஷ்யன் அவன் ஒரு 'கம்பெனி ஏஜெண்டு'. இந்தியாவிலிருந்து தாசிகள், நட்டுவர், கழைக் கூத்தாடிகள், செப்பிடு வித்தைக்காரர், ஜாலக்காரர் முதலிய பல தொழிலாள களைச் சம்பளம் கொடுத்துக் கூட்டிக்கொண்டு போய், வெள்ளைக்காரர் தேசங்களிலே, பல இடங்களில் கூடாரம் மடித்து வேடிக்கை காண்பிப்பது அந்தக் கம்பெனியாரின் தொழில். விதிவசத்தினுல் நான் அந்த ஜான்ஸன் துரை கம்பெனியிலே சேர்ந்தேன். இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய ஐரோப்பிய தேசங்களிலே ஸஞ்சாரம் செய்திருக் கிறேன். அமெரிக்காவுக்குப் போயிருக்கிறேன். இரண்டு வருஷங்களுக்கு முன்பு சண்டை தொடங்கினபோது மேற்படி 'கம்பெனி' கலைந்து போய்விட்டது. எங்களுக் கெல்லாம் பணம் கொடுத்து இந்தியாவுக்கு அனுப்பி விட்டார்கள். உயிருள்ளவரை போஜனத்துக்குப் போதும் படியான பணம் சேர்த்து வைத்திருக்கிறேன். ஆனலும் பூர்வீகத் தொழிலைக் கைவிடுவது ஞாயமில்லை என்று நினைத்து, இங்கு வந்த பின்னும் பல ஊர்களில் சுற்றி இதே தொழில் செய்து வருகிறேன்.

ஐரோப்பா முதலிய தேசங்களில் சுற்றின காலத்தில் மற்றக் கூத்தாடிகளைப் போல வீண்பொழுது போக்காமல் அவ்விடத்துப் பாஷைகளைக் கொஞ்சம் படித்து வந்தேன் எனக்கு இங்கிலீஷ் நன்ருகத் தெரியும். வேறு சில பாஷை களும் தெரியும். அநேக புஸ்தகங்கள் வாசித்திருக்கிறேன்

ங்கு வந்து பார்க்கையிலே, அவ்விடத்து ஜனங்களைக் ட்டிலும் இங்குள்ளவர்கள், பல விஷயங்களிலே குறைவு ட்டிருக்கிறார்கள்.

நம்முடைய பரம்பரைத் தொழிலை வைத்துக் காண்டே ஊருராகப் போய், இங்குள்ள ஜனங்களுக்குக் டியவரை நியாயங்கள் சொல்லிக்கொண்டு வரலா மன்று புறப்பட்டிருக்கிறேன். இதுதான் என்னுடைய ருத்தாந்தம்" என்றான்.

ஒரு ஜரிகை வேஷ்டி எடுத்துக் கொடுக்கப் போனேன். பான தீபாவளிக்கு வாங்கினது; நல்ல வேஷ்டி.

"சாமி வேண்டியதில்லை" என்று சொல்லிவிட்டு, வன் மறுபடி உடுக்கை யடித்துக்கொண்டு போய் ட்டான். போகும்போதே சொல்லுகிறான் :—

"குடு குடு, குடு குடு, குடு குடு, குடு குடு
சாமிமார்க் கெல்லாம் தைரியம் வளருது,
தொப்பை சுருங்குது; சுறுசுறுப்பு விளையுது,
எட்டு லட்சுமியும் ஏறி வளருது,
பயந் தொலையுது, பாவந் தொலையுது
சாத்திரம் வளருது, சாதி குறையுது,
நேத்திரம் திறக்குது, நியாயந் தெரியுது,
பழைய பயித்தியம் படீலென்று தெளியுது,
வீரம் வருகுது, மேன்மை கிடைக்குது,
சொல்லடீ சக்தி, மலையாள பகவதி,
தர்மம் பெருகுது, தர்மம் பெருகுது,"

ன்று சொல்லிக் கொண்டே போனான். அவன் முதுகுப் மத்தை நோக்கி, தெய்வத்தை நினைத்து, ஒரு கும்பிடு பாட்டேன்.

# 10. ஓம் சக்தி

[குறிப்பு: *அன்பை அடிப்படையாகக்கொண்டு மானிட ஜாதி இயங்கினால், உலகத்தில் ஏற்படுகின்ற பல தொல்லைகள் மறைந்து போகும் என்பதைப் பாரதியார் பல இடங்களில், கவிதைகளிலும், உரைநடை இலக்கியத்திலும் வற்புறுத்தியிருக்கிறார். ஆனால், இந்த அன்பு வெறும் வாய்ப்பேச்சோடு நின்றுவிடக்கூடாது; செயலிலே காண்பிக்கப்பட வேண்டும். கொள்கைக்கும் செய்கைக்கும் உள்ள தூரம் மிக அதிகமாக இருக்கிறது என்று அவர் வருந்துகிறார். மேடையேறிப் பேசும்போது ஆச்சரியப்படும்படியாக இருக்கும்; செய்கையிலே அந்தப் பேச்சு அப்படியே நின்றுபோகும். இதுதான் மனித இனத்தைப் பிடித்துள்ள சாபக்கேடு. புத்தருடைய அன்பு மதத்தைப் பற்றிப் பேசச் சொன்னால் அற்புதமாகப் பலர் பேசுவார்கள். அவர்களுடைய வாழ்க்கைநெறி இந்தப்பேச்சுக்கு முற்றிலும் மாறுபட்டதாக இருக்கும்.*

*'எத்தனையோ கட்டுப்பாடுகள், நியமங்களுக்கு நாம் உட்பட்டு நடக்கிறோம். ஒரு புதிய நியமத்தை ஏன் கைக்கொள்ளக் கூடாது?' என்று பாரதியார் கேட்கிறார்.*

*செல்வர்கள் தம்முடைய செல்வத்தை எல்லாருக்கும் பகிர்ந்தளிக்க வேண்டியதில்லை. அதைப் பயன்படுத்திச் சொல்வத்தை மேலும் பெருக்கிப் பலருக்குப் பயன்படும்படி செய்ய*

வேண்டும் என்று மற்றொரு கட்டுரையில அவர் கூறியிருப்பதையும் கவனிக்க வேண்டும்.]

இனிமேல் யாரேனும் ஒரு மஹான் வந்து, மனுஷ்யனைச் சாகாமல், நூறுண்டேனும் பயமில்லாது வாழக் கூடிய மருந்தும் உபாயமும் உலகத்துக்குக் காண்பிக்கலாம். மனுஷ்யன் பாபத்தை விட்டால் அமரத் தன்மையை அடையலாம். 'பாபத்திற்கு மரணம் சம்பளம்' என்று கிருஸ்துவ வேதம் சொல்லுகிறது. பாபத்தை நீக்கி மனிதர் மரணத்தை வெல்லக்கூடிய காலம் வரலாம்.

ஆனுல், இப்போதுள்ள நிலைமையில், மனிதன் இந்த உலகத்தில் வாழ்வது சதமில்லை. 'இன்றைக்கிருப்பாரை நாளைக்கிருப்பார் என்று எண்ணவோ திடமில்லையே' யென்று தாயுமானவர் சொன்னுர்.

எங்கிருந்தோ வந்து இவ்வுலகத்தில் சில நாள் வாழ் கிறோம். செத்தபிறகு நம்முடைய கதி என்ன ஆகுமோ? கடவுளுக்குத்தான் தெரியும். மூன்றே முக்கால் நாழிகை உயிர்வாழ்வது சந்தோஷத்துடன் இருந்துவிட்டு போகக் கூடாதா? அடடா, இந்த பூமியில் மனித உயிருக்கு எத்தனை கஷ்டம், எத்தனை பயம், எத்தனை இடையூறு, எத்தனை கொலை, எத்தனை துரோகம், எத்தனை பொய், எத்தனை கொடுமை, எத்தனை அநியாயம். ஐயோ பாவம்!

அடா மனிதர்களே; எத்தனையோ சாஸ்திரங்களுக்கும், சங்கிலிகளுக்கும், கட்டுப்பாடுகளுக்கும், நம் மனிதர் கட்டுப்பட்டிருக்கவில்லையா? ஒரு புதுக் கட்டுப்பாடு செய்து கொள்வோமே. அந்தக் கட்டுப்பாடு யாதெனில்:— ஒருவர்க்கொருவர் மனதாலும் தீங்கு நினைப்பதில்லை. ஒருவர்க்கொருவர் பயப்படல் இல்லை? மானிடரே, இந்த விரதம் எடுத்துக்கொள்ளுங்கள். இது பிழைக்கும் வழி.

தெருவில் நடக்கும்போதே முன்பின் தெரியாத மனி
கூட ஒருவர்க்கொருவர் கோபம் அல்லது அவமதி
அல்லது பயத்தோடு பார்த்துக் கொள்கிறார்க
மனிதனுக்கு மனிதன் இயற்கையில் விரோதம் என்
நிலையில் உங்களுடைய மூடத்தனமான மனுஷ்ய நாகரீ
வந்து சேர்ந்து இருக்கிறது. இதை மாற்றி, அன்பை மூ
தார மாக்கவேண்டும்.

முதலாவது, சிலருக்கு சோறு மிதமிஞ்சியிருக்க பல
தின்னச் சோறில்லாமல் மடியும் கொடுமையை தீர்த்
விட வேண்டும். இது இலக்கம் ஒன்று. பூமியின்மீதுள்
நன்செய், புன்செய், தோப்பு, துறவு, சுரங்கம், நதி, அருவி
குப்பை, செத்தை, தரை—கடவுளுடைய சொத்தில் நா
வேலி கட்டக்கூடிய பாகத்தையெல்லாம்—சிலர் தா
ளுக்குச் சொந்தமென்று வேலி கட்டிக் கொண்டன
பலருக்கு ஆகாசமே உடைமை. வாயு ஆகாரம். இதற்
மருந்து என்னவென்றால் 'எல்லோரும் சமானம், அண்ண
தம்பிபோல' என்ற புத்தி உண்டாய் ஏழைகள் வயி
பசிக்காமல் செல்வர்கள் காப்பாற்ற வேண்டும்.

அது முடியாவிட்டால், ஐரோப்பாவில் 'சோஷலிஸ்ட
கட்சியார் சொல்வது போல நிலத்தை ஸகலருக்கு
பொதுவென்று ராஜ்யவிதி ஏற்பாடு செய்துகொள்
வேண்டும்.

மனிதர் அத்தனை பேருக்கும் போதுமான ஆகார
பூமிதேவி கொடுக்கும். பூமிதேவியின் பயனை நே
கையாளத் தெரியாமல், பொறுமையாலும், அறியாமை
யாலும், தாறுமாறாக விழல்படுத்தி சோறுதேடும் இட
தில் சோறு தேடாமல், ஒருவர்க்கொருவர் கொல்ல வ
தேடி, பலர் வயிறுவாடச் சிலர் வயிறு ஜீர்ண சக்திய

ாமல் போக, மனிதர் பரிதாபகரமாகக் காக்கையிலும் டைப்பட்ட வாழ்வு வாழ்ந்து வீணே நசித்துப் பாகிறோம். 'ஏழைகள் வருந்தினால் நமக்கென்ன?' என்று னைப்பவர் பரம மூடர். பலர் சௌகரியப் படும்வரை லர் சௌகரியம் அடைதல் இந்த உலகத்தில் சாத்திய ில்லை. பொருளாளி நல்ல உடுப்புக்களை அணிந்து கொண்டு தெருவில் உலாவப் போவதையும், அவனுடைய ன்னத்தில் சதை உப்பியிருப்பதையும், அவனுடைய வலாட்களின் தொகையும் சிறுமையும், மேற்படி பொருளாளி பிறரை அவமரியாதை செய்வதையும் கண்டு யங்கிப்போய் அவன் பரமானந்த நிலையிலிருப்பதாக ழை நினைக்கிறான். அது தவறு. அவன் மனதில் ஒளிந்து டந்து அவன் உயிருக்கு நரகவேதனை செய்யும் துயரங் ளை ஏழை அறியமாட்டான். ஒரு வகுப்பின் மனம் ற்றொரு வகுப்புக்குத் தெரியாமலும், ஒருவனுடைய ள்ளம் மற்றொருவனுக்குத் தெரிய இடமில்லாமலும், னுஷ்ய நாகரீகம் அவ்வளவு மூடத்தனமான நிலைக்கு ந்து சேர்ந்திருக்கிறது.

## வறுமையின் பயன்

ஏழையின் அழுக்குத் துணியையும், அழுக்குடம்பை யும், சிரைக்காத முகத்தையும் பார்த்து பொருளாளியின் குழந்தைகள் மேற்படி ஏழை தமது மனுஷ்ய பதவிக்குத் தாழ்ந்த பன்றி, நாய், மாடு வகுப்பைச் சேர்ந்தவன் என்று நினைக்கிறார்கள். ஐரோப்பாவில் ஏழைக்கும் பொருளா ரிக்கும் விரோதம் முற்றிப்போய், உள்நாட்டுச் சண்டை ள் நேரிட்டும், அப்படி நேரிடாதபடி தடுக்கவேண்டு மென்ற நோக்கத்துடன் ஜனங்களை ஒன்று சேர்க்கும்

பொருட்டாக வெளிநாடுகளின் மீது சில ராஜாக்க
போர் தொடங்க, கண்டங்களில் போர் பரவியும், பூமண்
டலம் தூள் தூளாகிறது. கிழக்குத் தேசங்களிலும்
யுத்தமில்லாமல் சமாதானத்துடன் இருக்கும் இட
களிலும்—திருஷ்டாந்தமாக நமது தமிழ் நாட்டுப் பறைய
கூட—கண் விழித்துத் தாங்கள் மனிதர் என்பதை
தெரிந்துகொண்டு மற்ற ஜாதியாருக்கு தாங்கள் சமா
மென்று சபை கூட்டித் தீர்மானம் செய்கிறார்கள். மந்தி
மாண்டேகுவிடம் முறையிட்டார்கள். கிழக்குத் தேச
களில் சமாதான எல்லைகளிலேகூட ஏழைகள் கண் திறந்
பொருளாளிகளை எதிர்க்கத் தொடங்கியிருக்கிறார்கள்.

சுருங்கக் கூறுமிடத்து, சோற்றுக்காக மனிதர் ஒருவர்
கொருவர் செய்து கொள்ளும் அநியாயம் நா
களும் பன்றிகளும் தமது ஜாதிக்குள்ளே செய்
வழக்கமில்லை என்பது உலகப் பிரசித்தமான விஷய
ஆங்கில பாஷையில் Lord Byron என்ற மகா கவி ஒ
சமயத்தில் மனிதரை 'நாய்களே' என்று கூறினார். பிற
உண்மையில் மனிதரைக்காட்டிலும் நாய் ஜாதி மே
பட்டதாகையால், மனிதரை நாய்களே என்று சொல்லி
திலிருந்து நாய் ஜாதிக்கு அவமரியாதை செய்வதா
ஏற்படுமாகையால், அதை மாற்றி 'ஏ மனிதரே' என்
கூப்பிட்டார்.

## தீர்ப்பு

அன்புதான் இதற்கெல்லாம் தீர்ப்பு. எல்லா மன
ருக்கும், ஆணுக்கும், பெண்ணுக்கும், குழந்தைக்கு
வெள்ளைக்கும், மஞ்சளுக்கும், செம்புக்கும், கருநிறத்

நக்ரோவருக்கும் சகலருக்கும் உள்ளே பரமாத்மா பரம புருஷனுகிய நாராயணனே அந்தர்யாமியாக நின்று லெளித் தொழில்களை நிகழ்த்துகிருன். ஆதலால் மானிடரே, சகோதர உணர்ச்சியே தீர்ப்பு. சகோதர உணர்ச்சியைப்பற்றி கவிதைகள் பாடுவதும் நீதிநூல்கள் புகழ்வதும் வர்த்தமான பத்திரிகைகள் கர்ஜனை செய்வதும் இவ்வுலகத்தில் சாதாரணமாக இருக்கிறது. நடையில், எந்தக் கண்டத்திலும் எந்த மூலையிலும் அந்த முயற்சி காணப்படவில்லை. அது நடைக்கு வரவேண்டும். கண்ணில்லாதவன் வான சாஸ்திரம் படிக்கமுடியாது. இன்பமோ அன்புலகத்தைச் சேர்ந்த பதார்த்தம். ஆதலால் அன்பில்லாவிடின் இன்பமில்லை. இன்பத்தைத் தேடித்தேடி, எங்கும் எப்பொழுதும் எதனிலும் காணுமல் வருந்துகிற மானிடரே, கேளுங்கள்.

அன்புண்டானுல் இன்பமுண்டு என்பதை புத்த பகவான் கண்டுபிடித்துச் சொன்னுர். அந்த யுக்தியின் மகிமையை நேரே மனிதர் தெரிந்துகொள்ளாமல், அவர் காட்டிய பயனை அடையாமலே யிருந்து வருகிருர்கள். அன்பு கொள்கையில் இருந்தால் போதாது; செய்கையில் இருக்கவேண்டும். உன்னிடம் ஒருகோடி ரூபாய் இருந்தால் தேச நன்மைகாகக் கொடுத்துவிட்டு நீ ஏழையாகிவிடத் துணிவாயானுல், நீ உன் தேசத்தின்மீது அன்புடைய னுகக் கருதப்படுவாய். உன்னுடைய குழந்தையின் உயிரைக் காக்கும் பொருட்டாகப் புலியின் வாயில் நீ பாய் முதலாவது கையிடத் துணிவாயானுல், நீ குழந்தை டம் அன்புடையவனுகக் கருதப்படுவாய். பறையனுக் கும் போஜனம் செய்வித்து பக்கத்தில் வைத்துக்கொண்டு சாப்பிட்டால், நீ மனுஷ்யனிடம் அன்புடையவனுக விளங்குவாய்,

# 11. மிளகாய்ப்பழச் சாமியார்

[குறிப்பு: இது கதைக் கொத்து என்ற நூலில் சேர்க்கப்பட்டுள்ளது. பாண்டிச்சேரியில் பாரதியார் வாழ்ந்த காலத்தில் அவர் இதை எழுதியிருக்கிறார். கதைக் கொத்தில் உள்ள கதைகள் எல்லாவற்றிலும் பாரதியாரின் தன்னிணைப்பு அநேகமாக இருப்பதைக் காண லாம். சிறுகதை என்ற துறை கவிஞர் காலத்தில் தமிழில் நன்கு வளர்ந்தோங்க வில்லையாயினும், இக்கதைகள் சுவையானவை; தனிப்போக்கு உடையவை என்பதில் ஐயமில்லை.

மக்களுடைய மடமை, மூடபக்தி, பெண் களின் நிலைமை, ஜாதி சமயச் சண்டைகள் போன்றவற்றைக் கதைகளின் வாயிலாக எடுத் துக்காட்டி, அவற்றை மாற்றப் பாரதியார் முயற்சி செய்கிறார்.

மிளகாய்ப் பழச்சாமியார், கவிஞருடைய உள்ளத்திலிருந்த பெண்கள் விடுதலைபற்றிய சிந்தனைகளையே எடுத்துரைப்பதாகக் காண்கிறது.

பெண்கள் முன்னேற்றம்பற்றி 1905—9ஆம் ஆண்டில் சிறிதுகாலம் சக்கரவர்த்தினி என்ற மாசிகைக்கு பாரதியார் ஆசிரியராக இருந்த காலத்திலேயே கொண்டிருந்த எண்ணங்களே இதில் வெளியாகின்றன. தொடக்கத்திலேயே பெண்களை உயர்த்தவேண்டும் என்று, திட்ட வட்டமான கொள்கை உடையவர் என்பது பெரிதும் கவனிக்கற்பாலது.]

இந்த நெசவுத் தொழிலாளர் அத்தனை பேரும் அங்காளியம்மனுடைய அவதாரமென்பதாக ஒரு ஸ்திரீயை வணங்குகிருர்கள். அந்த ஸ்திரீ சுமார் நாற்பத்தைந்து வயதுடையவள். சரீரத்தில் நல்ல பலமும், வீரதீர பராக்கிரமங்களும் உடையவள். இவளுடைய புருஷன் இறந்து போய் இருபத்தைந்து வருஷங்களாயின.

இவள் காவி வஸ்திரமும் சடை முடியும் தரிக்கிருள் இவளுடைய முகம் முதிர்ந்த, பெரிய, வலிய, உறுதியான ஆண் முகம்போல இருக்கிறது. அத்துடன் பெண்ணொளி கலந்திருக்கிறது. இவளுடைய கண்கள் பெரிய மான் விழிகளைப் போல் இருக்கின்றன.

இவள் ஒரு சுப்பிரமணிய சுவாமி கோயில் கட்டிக் கொண்டிருக்கிருள். கோயில் கட்டிடம் பெரும்பாலும் முடிந்து போய்விட்டது. இன்னும் சிகரம் மாத்திரந் தான் வைக்கவில்லை.

இவள் தன் வீட்டுக்குள் ஒரு வேல் வைத்துப் பூஜை பண்ணுகிருள். அதன் பக்கத்தில் இரவும் பகலும் அவியாத வாடா விளக்கு எரிகிறது.

கோயிலும் இவள் வீட்டுக்கு ஸமீபத்திலேதான் கட்டியாகிறது. இவளுடைய வீடு வேதபுரத்துக்கும் முத்துப் பேட்டைக்கும் இடையே ரஸ்தாவின் நடுமத்தியில் சுமை தாங்கிக்கு ஸமீபத்தில் இருக்கிறது.

திருக்கார்த்திகையன்று, பிரதி வருஷமும் அடியார்கள் சேர்ந்து இவளுக்கு மிளகாய்ப் பழத்தை அரைத்து உடம்பெல்லாம் தேய்த்து ஸ்நானம் செய்விக்கிருர்கள். அதனுலேதான் இவளுக்கு "மிளகாய்ப்பழச் சாமியார்" என்ற நாமம் ஏற்பட்டது.

நான் இந்த மிளகாய்ப்பழச் சாமியாருடைய கோயி லுக்குப் பலமுறை போய் வேலைக் கும்பிட்டிருக்கிறேன் இன்று காலை இந்த ஸ்திரீ என்னைப் பார்க்கும் பொருட்டு வந்தாள். வந்து கும்பிட்டாள்.

"எதன் பொருட்டு கும்பிடுகிறீர்?" என்று கேட்டேன்

"எனக்குத் தங்களால் ஒரு உதவியாக வேண்டும்' என்றாள்.

"என்ன உதவி?" என்று கேட்டேன்.

"பெண் விடுதலை முயற்சியில் எனக்குத் தங்களால் இயன்ற ஸகாயம் செய்யவேண்டும்" என்றாள்.

"செய்கிறேன்" என்று வாக்குக் கொடுத்தேன்.

அப்போது அந்த மிளகாய்ப்பழச் சாமியார் பின் வருமாறு உபந்யாஸம் புரிந்தாள்:—

"ஹா, ஹா, பொறுத்துப் பொறுத்துப் பொறுத்துப் பொறுத்துப் போதுமடா போதுமடா, போதும்!

உலகத்திலே நியாயக் காலம் திரும்புவதாம்.

ருஷியாவிலே கொடுங்கோல் சிதறிப் போய் விட்ட தாம்.

ஐரோப்பாவிலே ஏழைகளுக்கும் பெண்களுக்கும் நியாயம் வேண்டுமென்று கத்துகிறார்களாம்.

உலக முழுமைக்கும் நான் சொல்லுகிறேன்.

ஆண் பெண்ணுக்கு நடத்தும் அநியாயம் சொல்லுக் கடங்காது. அதை ஏட்டில் எழுதியவர் இல்லை. அதை மன்றிலே பேசியவர் யாருமில்லை.

பறையனுக்குப் பார்ப்பானும், கறுப்பு மனுஷனுக்கு வெள்ளை மனுஷனும் நியாயம் செய்யவேண்டும் என்று சொல்லுகிறீர்கள்.

பெண்ணுக்கு ஆண் நியாயம் செய்வது அதை யெல்லாம்விட முக்கியமென்று நான் சொல்லுகிறேன்.

எவனும் தனது சொந்த ஸ்திரீயை அலக்ஷ்யம் பண்ணுகிறான். தெருவிலே வண்டி தள்ளி நாலணா கொண்டு வருவது மேல்தொழில் என்றும், அந்த நாலணா வைக்கொண்டு நாலு வயிற்றை நிரப்பி வீடு காப்பது தாழ்ந்த தொழிலென்றும் நினைக்கிறான். பெண்கள் உண்மையாக உழைத்து ஜீவிக்கிறார்கள். ஆண் மக்கள் பிழைப்புக்காகச் செய்யும் தொழில்களில் பெரும்பாலும் பொய், சூது, களவு, ஏமாற்று, வெளிமயக்கு, வீண் சத்தம், படாடோபம், துரோகம், கொலை, யுத்தம்!

இந்தத் தொழில்கள் உயர்வென்றும் சோற்றுக்குத் துணி தோய்த்துக் கோயில் செய்து கும்பிட்டு வீடு பெருக்கிக் குழந்தைகளைக் காப்பாற்றும் தொழில் தாழ் வென்றும் ஆண் மக்கள் நினைக்கிறார்கள்.

வியபிசாரிக்குத் தண்டனை இஹலோக நரகம்.

ஆண் மக்கள் வியபிசாரம் பண்ணுவதற்கு சரியான தண்டனையைக் காணோம்.

பர ஸ்திரீகளை இச்சிக்கும் புருஷர்களின் தொகைக்கு எல்லை யில்லை யென்று நான் சற்றே மறைவிடமாகச் சொல்லுகிறேன். ஆனால் அவர்கள் பத்தினிகளை நேரே அவர்கள் நோக்க யோக்யதையில்லாமல் இருக்கிறார்கள்.

பூமண்டலத்தின் துக்கம் ஆரம்பமாகிறது. ஆணும் பெண்ணும் ஸமானம். பெண் சக்தி. ஆண்...பெண் ணுக்கு ஆண் தலை குனியவேண்டும். பெண்ணை ஆண்

அடித்து நசுக்கக்கூடாது. இந்த நியாயத்தை உலகத்தில் நிறுத்துவதற்கு நீங்கள் உதவி செய்யவேண்டும். உங்களுக்குப் பராசக்தி நீண்ட ஆயுளும் இஷ்ட காம்யசித்திகளும் தருவாள்" என்று, அந்த மிளகாய்ப்பழச் சாமியார் சொன்னாள். சரியென்று சொல்லி நான் அந்த தேவிக்கு வந்தனம் செய்தேன். அவள் விடை பெற்றுக்கொண்டு சென்றாள்.

## 12. மூட பக்தி

[குறிப்பு: பாரதியார் இரண்டாம் முறையாக சுதேசமித்திரனில் உதவி ஆசிரியராக அமர்ந்து பணிபுரிந்து கொண்டிருக்கிறார். பாண்டிச்சேரியிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்து, கடயத்தில் சிறிது காலம் தங்கியிருந்து, பிறகு தான் சென்னைக்கு வந்து மித்திரனில் பணிபுரிகின்றார். அவர் அக்காலத்தில் திருவல்லிக்கேணி தெளிசிங்கப் பெருமாள் கோயில் தெருவில் குடியிருக்கிறார். அருகிலே மற்றொரு வீதியில் மண்டயம் ஸ்ரீநிவாசாசாரியார் தமது இல்லத்தில் வசித்து வருகிறார்.

ஒருநாள் காலை முகக்ஷவரம் செய்துகொள்ளுவதற்காக பாரதியார் ஸ்ரீநிவாசாசாரியரின் இல்லத்திற்கு வந்து தமது வேலையைத் தொடங்குகிறார்.

ஸ்ரீமதி யதுகிரி அம்மாள் வேடிக்கையாக "மாமா, உங்கள் வீட்டில் க்ஷவரம் செய்து கொள்ள இடமில்லையா?" என்று கேட்கிறார்.

பாரதியார் சொல்லுகிருர்: "இடமிருக்கிறது. ஆனுல் இந்த நாள் க்ஷவரம் செய்து கொள்ளச் சரியான நாளல்ல என்று மனைவி செல்லம்மா சொன்னுள்: அதனுல் இங்கே வந்தேன்" என்கிருர்.

இந்தச் செய்தியை "பாரதி நினைவுகள்" என்ற தமது நூலில், யதுகிரிஅம்மாள் அவர்களே எழுதியுள்ளார்கள். சுவையான நூல் அது.

இவ்வாருகப் பல மூட நம்பிக்கைகளை பாரதியார் இக் கட்டுரையிலே சாடுகிருர்.

ஆங்கிலம் படிப்பதால் மட்டும் இவ்விதமான மூடநம்பிக்கைகள் மறையும் என்று கவிஞர் நம்பவில்லை. தாம் ஆங்கிலக் கல்வி கற்றதால் உண்டான பயனைப்பற்றி, "செலவு தந்தைக் கோராயிரம் சென்றது; தீதெனக்குப் பல்லாயிரம் நேர்ந்தன" என்று கூறுகிருர்.

ஆங்கிலக் கல்வியால் பயன் உண்டு என்பதைப் பாரதியார் மறுக்கவில்லை. கல்விமுறை கற்றவற்றின்படி நடக்கக்கூடிய தைரியத்தைக் கொடுக்கவில்லை என்பதே அவருடைய குற்றச்சாட்டு.

பந்தி போஜனம் என்ற காரணத்தைப் பெரிதுபடுத்த வேண்டியதில்லை. ஆனுல் ஆங்கிலக் கல்வி பல குருட்டு நம்பிக்கைகளை அகற்றுவதற்கு வேண்டிய துணிச்சலைக் கொடுக்கவில்லை; இன்றும் கூடக் கொடுக்கவில்லை என்பதையே கருத வேண்டும்.]

நம்முடைய ஜனங்களுக்கிடையே இந்த நிமிஷம்வரை நடைபெறும் மூட பக்திகளுக்குக் கணக்கு வழக்கே கிடையாது. இதனுல் நம்மவர்களின் காரியங்களுக்கும் விவகாரங்களுக்கும் ஏற்படும் விக்கினங்களுக்கு எல்லே இல்லே.

இந்த மூட பக்திகளிலே மிகவும் தொல்லேயான அம்சம் யாதெனில், எல்லாச்செய்திகளுக்கும் நாள், நக்ஷத்திரம், லக்னம் முதலிய பார்த்தல். க்ஷவரம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்முல், அதற்குக்கூட நம்மவர் மாஸப் பொருத்தம், பக்ஷப் பொருத்தம், திதிப் பொருத்தம், நாட் பொருத்தம் இத்தனேயும் பார்த்தாக வேண்டியிருக்கிறது. க்ஷவரத்துக்குக்கூட இப்படியென்முல், இனிக் கலியாணங்கள், சடங்குகள், வியாபாரங்கள், யாத்திரைகள், விவசாய ஆரம்பங்கள் முதலிய முக்கிய கார்யங்கள் பல்லாயிரத்தின் விஷயத்திலே நம்மவர் மேற்படி பொருத்தங்கள் பார்ப்பதில் செலவிடும் கால விரயத்துக்கும் பொருள் விரயத்துக்கும் வரம்பே கிடையாது. சகுனம் பார்க்கும் வழக்கமும் கார்யங்களுக்குப் பெருந் தடையாக வந்து மூண்டிருக்கிறது. இதில் நேரும் அழிவுகளும், அவற்ருல் பொருள் அழிவுகளும் எவ்வளவு உண்டாகின்றன என்பதை நம்மவர் கவனிப்பதே கிடையாது. சகுனம் பார்ப்பதனுல் கார்ய நஷ்டம் மாத்திரம் உண்டாகிறது. நாட்பொருத்தம் முதலியன பார்க்குமிடத்தே, கார்ய நஷ்டம் மட்டுமன்றி, மேற்படி லக்னம் முதலியன பார்த்துச் சொல்லும் சோதிடருக்கு வேறு பணம் செலவாகிறது.

"காலம் பணவிலே உடையது" என்ற குறிப்புடைய இங்கிலீஷ் பழமொழி ஒன்று இருக்கிறது. இந்த சமாசாரம் நம்மவருக்குத் தெரிவதே கிடையாது. பொழுது வீணே கழிக்கப்படுமாயின், அதனுல் பண லாபம்

டையாமற் போகும். இன்று செய்யக்கூடிய கார்யத்தை நாளைக்குச் செய்லாமென்று தாமஸப்படுத்தி வைப்பதனால், அந்தக்காரியம் பலமான சேதமடைந்து போகும். எதையும் தோன்றிய மாத்திரத்திலே சூட்டோடு செய்யும்போது, அதில் வெற்றி பெரும்பாலும் நிச்சயமாகக் கிடைக்கும். அதைத் தூங்கப் போட்டுவிட்ட பிறகு செய்யப்போனால், அதில் ஆரம்பத்தில் இருந்த ரஸம் குறைந்து போகும். அதற்குத் தக்கபடி பயனும் குறைவெய்தும்.

"இத்தகைய மூட பக்திகளெல்லாம் 'படிப்பில்லாமையால் ஏற்பட்டிருக்கின்றன' என்றும், 'ஜனங்களுக்குப் படிப்புக் கற்றுக்கொடுத்தால் இவை அழிந்து போய்விடும்" என்றும் இங்கிலீஷ் படிப்பாளிகள் சொல்லக் கேள்விப் பட்டிருக்கிறேன். நானும் ஒருவாறு அது மெய்யென்றே நம்புகிறேன். ஆனால், அதற்குத் தற்காலத்தில் நமது தேசத்துப் படசாலைகளில் பயிற்றுவிக்கப்படும் இங்கிலீஷ் படிப்பு, சுத்தமாகப் பிரயோஜனமில்லை என்பது ஸ்பஷ்டமாக விளங்குகிறது. சென்ற நூறு வருஷங்களாக இந் நாட்டில் இங்கிலீஷ் படிப்பு நடந்துவருகிறது. ஆயிரக் கணக்கான படசாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. இவற்றுள் லக்ஷக்கணக்கான—கோடிக்கணக்கான ஜனங்கள் படித்துத் தேறியிருக்கிறார்கள். இவர்கள் மூடபக்திகளை எல்லாம் விட்டு விலகி நிற்கிறார்களா? இல்லை. நமது தேசத்தில் முப்பத்துமூன்று கோடி ஜனங்கள் இருக்கிறார்கள். இத்தனை ஜனங்களுக்கும் ஒருவர் மிச்சமில்லாமல் உயர்தரக் கல்வி கற்றுக் கொடுத்த பின்புதான் மேற்கூறிய சாமான்ய மூட பக்திகள் விலக வேண்டுமென்பது அவசியமில்லை. ஏற்கனவே, இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களில் படித்துத் தேறியவர்கள் இந்த விஷயத்தில் தமது மனச்சாக்ஷிப்படி யோக்யமாக நடந்து வந்திருப்பார்களானால், மற்றவர்

களிலும் பெரும்பாலோர் நடை திருந்தியிருப்பார்கள்
இன்னும் எத்தனையோ விஷயங்களில் நம்மவர் இங்கிலீஷ்
படித்தவரின் நடையைப் பின்பற்றித் தங்கள் புராதன
வழக்கங்களை மாற்றிக் கொண்டிருக்கக் காண்கிறோம். அது
போலவே இந்த விஷயத்திலும் நடந்திருக்கும்

ஆனால், இங்கிலீஷ் பள்ளிக்கூடத்திற்குப் போய்த்
தேறினவர்களிடம் மனசாக்ஷிப்படியும் தன் அறிவுப் பயிற்சி
யின் விசாலத்திற்குத் தகுந்தபடியும் நடக்கும் யோக்யதை
மிகமிகக் குறைவாக இருக்கிறது. இங்கிலீஷ் பள்ளிக்கூடங்
களில் எத்தனையோ சாஸ்திரங்கள்—நிஜ சாஸ்திரங்கள்
பொய் சாஸ்திரங்கள் இரண்டுங் கலந்தன—எத்தனையோ
விதச் சாஸ்திரங்கள் பயிற்றுகிறார்கள்.

ஆனால் ஸ்வதந்திரம், ஆண்மை நேர்மை, உண்மை
வீர்யம்—இவை அத்தனை ஜாக்கிரதையாகக் கற்றுக்கொடுப்
பதில்லை. அதிலும் ஒருவன் தன் மனமறிந்த உண்மை
யின்படி ஒழுக வேண்டுமென்றும், அங்ஙனம் ஒழுகா
திருத்தல் மிகவும் அவமானமும் பாவமுமாகும் என்றும்
கற்றுக்கொடுக்கும் வழக்கமே இல்லை. இந்த விஷயத்
தைக்கூட வாய்ப்பாடமாய்ப் படிப்பித்துக் கொடுக்கிறார்
கள். ஆனால் ஒழுக்கப் பயிற்சி இல்லை. புஸ்தகத்துக்கும்
வாய்ப்பேச்சுக்கும் செய்கைக்கும் இடையே லக்ஷ
யோசனை தூரமாக நடப்பவர்களுக்கு த்ருஷ்டாந்தம்
காட்டப் புகுமிடத்தே, நமது நாட்டில் இங்கிலீஷ் பள்ளிக்
கூடங்களில் தேறிவரும் மனிதரைப்போல் இத்தனை சிறந்த
த்ருஷ்டாந்தம் வேறெங்கும் கிடைப்பது மிகவும் துர்லபம்
மென்று தோன்கிறது.

> "கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
> சொல் வேறுடையார் தொடர்பு"

என்று திருவள்ளுவர் பாடியிருக்கிறார்.

இதன் பொருள்: வாய்ப்பேச்சு ஒரு மாதிரியாகவும் சய்கை வேறொரு மாதிரியாகவும் உடையோரின் உறவு னவிலும் கொள்ளுதல் தீது - என்பதேயாகும். பி. ஏ., ம். ஏ. பரீக்ஷைகள் தேறி, வக்கீல்களாகவும், உபாத் யாயராகவும், என்ஜினீயர்களாகவும், பிற உத்தியோ ஸ்தராகவும் வாழும் கணக்கில்லாத ஐயர், ஐயங்கார், ள்ளை முதலியவர்களில் எவராவது ஒருவர், தம் வீட்டுக் ல்யாணத்துக்கு லக்னம் பார்க்க வேண்டிய அவசியமில்லை ன்று நிறுத்தியிருப்பாரா? "பெண் பிள்ளைகளின் உபத்திர த்தால் இவ்விதமான மூடபக்திகளுக்குக் கட்டுப்பட்டு ாழும்படி நேரிடுகிறது" என்று சிலர் முறையிடுகிறார்கள். பண்பிள்ளைகளுக்கு மரியாதை கொடுக்க வேண்டிய டத்தில் கொடுக்க வேண்டும். மூடத்தனமான, புத்தி ான்கள் கண்டு நகைக்கும்படியான செய்கைகள் செய்ய வண்டுமென்று ஸ்திரீகள் பலனின்றிப் பிதற்றுமிடத்தே வர்களுடைய சொற்படி நடப்பது முற்றிலும் தவறு. மலும் அது உண்மையான காரணமன்று. போலிக் ாரணம். நம்மவர் இத்தகைய சாதாரண மூடபக்திகளை ட்டு விலகத் துணியாமலிருப்பதன் உண்மையான ாரணம், 'வைதிகரும் பாமரரும் நம்மை ஒருவேளை பந்தி பாஜனத்துக்கு அழைக்காமல் விலகிவிடுவார்கள்' என்பது ான். இங்கிலீஷ் படித்த மேற்குலத்து இந்துக்கள் கணக் ல்லாத மூட பக்திகளைக் கை விலங்குகளாகவும், கழுத்து லங்குகளாகவும் பூட்டிக்கொண்டு தத்தளிப்பதன் லைமைக் காரணம் மேற்படி பந்தி போஜனத்தைப் ற்றிய பயந்தான். அதைத்தவிர வேறொன்றுமில்லை. ந்த மெய்யான காரணத்தை மறைத்துவிட்டு ஸ்திரீ ரின்மீது வீண்பழி சுமத்தும் இந்த வீரர்கள் மற்றும் த்தனையோ விவகாரங்களில் தம்மினத்து மாதரை லையடிமைகள் போலவும், விலங்குகள் போலவும் நடத்தும்

விஷயம் நாம் அறியாததன்று. எண்ணில்லாத பொருள் நஷ்டமும் கால நஷ்டமும் அந்தக் காரணத்தின் இகழ்ச்சி யும் உலகத்து அறிஞரின் நகையாடலும் ஸத்ய தெய்வத்தின் பகைமையும் சிறிதென்று கொண்டீர்! பந்தி போஜன ஸ்வதந்திரம் பெரிதென்று கொண்டீர். தைரியமாக நீங்கள் உண்மை என்று உணர்ந்தபடி நடவுங்கள். பந்தி போஜனம் சிறிது காலத்துக்குத்தான் உங்களுக்குக் கிடைக்காதிருக்கும். பிறகு உங்கள் கூட்டத் தொகை அதிகமாகும். ஸத்ய பதம் முதலிய பல காரணங் களால் மேற்படி பந்தி போஜனமும் உங்களுக்கு ஸித்தியாய் விடும். தைர்யமாக வேலை செய்யுங்கள்!

## 13. பெண் விடுதலைக்குத் தமிழ்ப்பெண்கள் செய்யத்தக்கது யாது?

[குறிப்பு : பாரதியார் ஒரு புரட்சிகரமான போராட்டத்தைத் தம் மூத்தமகள் திருமதி தங்கம்மாவின் வாயிலாகத் தமிழ்ப் பெண்களுக்கு உபதேசிக்கிறார். காந்தி அடிகள் சாத்விகப் போராட்டத்தை அரசியல் உரிமைக்காக அக் காலத்தில் தென்னாப்பிரிக்காவில்குடியேறியிருந்த இந்தியர்களின் முன் வைக்கிறார். இதுவே அந் நாளில் ஒரு புதுமை.

அப் போராட்டத்தைப்பற்றி கூர்ந்து வாசித் தறிந்த பாரதியாருக்கு அதன் வலிமை புலனா கின்றது. அதேவிதமான சாத்விகப் போராட்டத் தைத் தங்கள் ஞாயமான உரிமையைப் பெறப் பெண்களுக்கு எடுத்தியம்புகிறார். பரிபூர்ண

ஸமத்துவம் இல்லாவிட்டால் ஆண்களோடு சேர்ந்து வாழமாட்டோம் என்று கூறுங்கள் என்கிருர் பாரதியார்.

இப்படிப்பட்ட சாத்விக எதிர்ப்பே பெண்களுக்கு விடுதலை பெற்றுத்தரும் என்று கவிஞர் எண்ணித் துணிகின்ருர்.

அஹிம்சைப் போராட்டத்தின் பெரு வலிமையை உணர்ந்த பாரதியார் காந்திஅடிகளை "மஹாத்மா நீ வாழ்க வாழ்க" என்று பின்ஞளில் வாழ்த்துக் கூறுகிருர். இப்படிப்பட்ட போராட்டத்தின் பெருமையையும் அவர் காந்தி பஞ்சகத்திலே நன்கு விளக்குகிருர்.]

[புதுச்சேரியில் ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதியின் குமாரி ஸ்ரீ தங்கம்மாவால் ஒரு பெண்கள் கூட்டத்தில் படிக்கப் பெற்றது.]

ஆறிலும் சாவு; நூறிலும் சாவு; ஆணுக்கு மட்டுமன்று பெண்ணுக்கு மப்படியே.

ஆதலால் உயிருள்ளவரை இன்பத்துடன் வாழ விரும்புதல் மனுஷ்ய ஜீவனுடைய கடமை. இன்பத்துக்கு முதல் அவசியம் விடுதலை. அடிமைகளுக்கு இன்பம் கிடையாது. தென் ஆப்பிரிக்காவில் ஹிந்து தேசத்தார் படுங் கஷ்டங்களைக் குறித்து, 1896ம் வருஷத்தில் கல்கத்தாவில் கூடிய பன்னிரண்டாயிரம் ஜனசபைக் (காங்கிரஸ்) கூட்டத்தில் செய்யப்பட்ட தீர்மானமொன்றை ஆதரித்துப் பேசுகையில் வித்வான் ஸ்ரீ. ஜி. பரமேச்வரன் பிள்ளை பின் வருமாறு கூறினர்:—

"மிகவும் உழைப்பாளிகளாகிய ஹிந்து தேசத்தார் அந்த நாட்டில் பரம்பரை முறியடிமைகளாக வாழும்படி

நேர்ந்திருக்கிறது. அங்கு நம்மவர் உத்திரவுச் சீட்டில்லாமல் யாத்திரை செய்யக்கூடாது. இரவு வேளையில் வெளியே சஞ்சரிக்கக்கூடாது. நகரங்களுக்கு நடுவே குடியிருக்கக் கூடாது. ஒதுக்கமாக நமக்கென்று கட்டப்பட்டிருக்கும் சேரி களில் வசிக்க வேண்டும். ரயில் வண்டியில் மூன்றாவது வகுப்பிலேதான் ஏறலாம்; முதலிரண்டு வகுப்புகளில் ஏறக் கூடாது. நம்மை ட்ராம் வண்டியிலிருந்து துரத்துகிறார்கள் ஒற்றையடிப் பாதையினின்றும் கீழே தள்ளுகிறார்கள். ஹோட்டல்களில் நுழையக் கூடாதென்கிறார்கள். பொது ரஸ்தாக்களில் நடக்கக் கூடாதென்று தடுக்கிறார்கள் நம்மைக் கண்டால் காறி உமிழ்கிறார்கள். "ஹுஸ்" என்று சீத்காரம் பண்ணுகிறார்கள். நம்மை வைகிறார்கள் சபிக்கிறார்கள். மனுஷ்ய ஜந்துக்களினால் சகிக்கக்கூடாத இன்னும் எத்தனையோ அவமானங்களுக்கு நம்மை உட்படுத்துகிறார்கள். ஆகையால் நம்மவர் இந்த நாட்டி லேயே இருந்து பஞ்சத்திலும் கொள்ளை நோயிலும் அழுந் திட்டாலும் பெரிதில்லை. நமது ஸ்வதந்திரங்களை வெளி நாடுகளில் அன்னியர் காலின்கீழே போட்டு மிதிக்காதபடி ராஜாங்கத்தாரால் நம்மைக் காப்பாற்ற முடியாவிட்டால், நம்மவர் வேற்று நாடுகளுக்கு குடியேறிப் போகாமல் இங்கிருந்து மடிதலே நன்று" என்றார். என்ன கொடுமை யான நிலை பார்த்தீர்களா?

ஆனால், சகோதரிகளே, தென் ஆப்பிரிக்காவில் மாத்திரமே இவ்விதமான கொடுமைகள் நடக்கின்றன என்று நினைத்து விடாதீர்கள்!

சகோதரிகளே! ஔவையார் பிறந்தது தமிழ்நாட்டில் மதுரை மீனாக்ஷியும், அல்லி அரசாணியும், நேற்று மங்கம் மாளும் அரசுபுரிந்த தமிழ் நாட்டிலே நம்முடைய நிலைமை தென்னாப்பிரிக்காவில் ஹிந்து தேசக் கூலிகளுடைய நிலை

யைக் காட்டிலும் கேடு கெட்டிருக்கிறதா? இல்லையா? உங்களுடைய அனுபவத்திலிருந்து நீங்களே யோசனை பண்ணிச் சொல்லுங்கள்.

நாமும் ஸ்வேச்சைப்படி வெளியே சஞ்சரிக்கக் கூடாது. நம்மைச் சேரிகளில் அடைக்காமல் சிறைகளில் அடைத்து வைக்க முயற்சி செய்கிறார்கள். ரயில் வண்டிகளில் நமக்கென்று தனிப்பகுதி ஏற்பாடு செய்து வைத்திருக்கிறார்கள். நம்மைக் கண்டாலும் ஆண்மக்கள் நிஷ்காரணமாய் சீறி விழுகிறார்கள்; காறி உமிழ்கிறார்கள்; வைகிறார்கள்; அடிக்கிறார்கள். நாம் நமதிஷ்டப்படி பிறருடன் பேசக் கூடாதென்று தடை செய்கிறார்கள். மிருகங்களை விற்பது போல், நம்மை விலைக்கு விற்கிறார்கள். தம்முடைய நூல்களிலும் ஸம்பாஷணைகளிலும் ஓயாமல் நம்மைத் தூற்றிக் கொண்டிருக்கிறார்கள். வழக்கத்தால் நாம் இத்தனை பாடுக்கும் ஒருவாறு ஜீவன் மிஞ்சியிருக்கிறோமெனினும், இந்த நிலை மிக இழிவானதென்பதிலும், கூடிய சீக்கிரத்தில் மாற்றித் தீரவேண்டிய தென்பதிலும் சந்தேகமில்லை. இதற்கு மருந்தென்ன?

தென் ஆப்பிரிக்காவில் ஹிந்து தேசத்துக் கூலியாட்களுக்கு ஸ்ரீமான் மோஹனதாஸ் கரம்சந்த் காந்தி எந்த வழி காட்டினாரோ, அதுவே நமக்கும் வழி. தென் ஆப்பிரிக்காவில் வெள்ளையரை ஹிந்துக்கள் ஆயுதபலத்தால் எதிர்க்கவில்லை. கைத்துப்பாக்கி வெடிகுண்டு முதலியவற்றை உபயோகிக்க விரும்பின சில இளைஞரைக்கூட அது செய்யலாகாதென்று மஹாத்மா காந்தி தடுத்துவிட்டார். "அநியாயத்தை அநியாயத்தால் எதிர்த்தலென்பது அவசியமில்லை. அதர்மத்தை அதர்மத்தால்தான் கொல்ல வேண்டுமென்பது அவசியமன்று. நாம் அநியாயத்தை

நியாயத்தால் எதிர்ப்போம்; அதர்மத்தை தர்மத்தால் ஒழிப்போம்" என்று காந்தி சொன்னார்.

சகோதரிகளே, நாம் விடுதலை பெறுவதற்கும் இதுவே உபாயம். நமக்கு அநீதி செய்யும் ஆண் மக்களுடனே நாம் அன்புத்தளைகளால் கட்டுண்டிருக்கிறோம். நமக்கு அவர்கள் அண்ணன் தம்பிகளாகவும், மாமன் மைத்துனராகவும், தந்தை பாட்டனாராகவும், கணவர் காதலராகவும் வாய்த்திருக்கின்றனர். இவர்களே நமக்குப் பகைவராகவும் மூண்டிருக்கையிலே, இவர்களை எதிர்த்துப் போர் செய்ய வேண்டுமென்பதை நினைக்கும்போது, என்னுடைய மனம், குருக்ஷேத்திரத்தில் போர் தொடங்கியபோது அர்ஜுனனுடைய மனது திகைத்தது போலே திகைக்கிறது. ஆண் மக்களை நாம் ஆயுதங்களால் எதிர்த்தல் நினைக்கத்தகாத காரியம். அது பற்றியே, 'சாத்விக எதிர்ப்பினால் இவர்களுக்கு நல்ல புத்தி வரும்படி செய்ய வேண்டுமென்று' நான் சொல்லுகிறேன்.

'அடிமைப்பட்டு வாழமாட்டோம்; ஸமத்வமாக நடத்தினாலன்றி உங்களுடன் சேர்ந்திருக்க விரும்போம்' என்று அவர்களிடம் வெளிப்படையாகவும் தெளிவாகவும் சொல்லிவிட்டு, அதனின்றும் அவர்கள் கோபத்தால் நமக்கு விதிக்கக்கூடிய தண்டனைகளையெல்லாம் தெய்வத்தை நம்பிப் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுப்பதே உபாயம். இந்த சாத்விக எதிர்ப்பு முறையை நாம் அனுசரிக்கத் தொடங்க வேண்டுமாயின், அதற்கு இந்தக் காலமே சரியான காலம். அந்த வருஷமே சரியான வருஷம். இந்த மாஸமே நல்ல மாஸம். இன்றே நல்ல நாள் இந்த முகூர்த்தமே தகுந்த முகூர்த்தம்.

சகோதரிகளே! இப்போது பூமண்டலமெங்கும் விடுதலைப் பெருங்காற்று வீசுகிறது. கொடுங்கோலரசர்

...க்குள்ளே கொடியவனாய் ஹிரண்யனைப்போல் ஐரோப்பாவின் கிழக்கே பெரும் பகுதியையும் ஆசியாவின் வடக்கே பெரும் பகுதியையும் ஆண்ட ஸார் சக்ரவர்த்தி, இப்போது ஸைபீரியாவில் சிறைபட்டுக் கிடக்கிறான். 'பாரத நாட்டைக் காப்பதிலே எனக்குத் துணைபுரிய வாருங்கள்" என்று ஆங்கிலேயன் ஹிந்துக்களைக் கூப்பிடு கிறான். விடுதலைக்காற்று, 'வீர், வீர்' என்று வேகமாக வீசுகிறது.

ஒரு ஸ்திரீயானவள் இந்த ஸாத்விக எதிர்ப்பு முறையை அனுசரிக்க விரும்பினால், தனது கணவனிடம் சொல்லத் தக்கது யாதெனில்:—

"நான் எல்லா வகைகளிலும் உனக்குச் சமமாக வாழ்வதில் உனக்குச் சம்மதமுண்டானால் உன்னுடன் வாழ்வேன். இல்லாவிட்டால், இன்று இராத்திரி சமையல் செய்யமாட்டேன். எனக்கு வேண்டியதைப் பண்ணித் தின்று கொண்டிருப்பேன். உனக்குச் சோறு போட மாட்டேன். நீ அடித்து வெளியே தள்ளினால் ரஸ்தாவில் கிடந்து சாவேன். இந்த வீடு என்னுடையது. இதைவிட்டு வெளியேறவும் மாட்டேன்" என்று கண்டிப்பாகச் சொல்லி விடவும் வேண்டும். இங்ஙனம் கூறும் தீர்மான வார்த்தையை, இந்திரிய இன்பங்களை விரும்பியேனும், நகை, துணி முதலிய வீண் டம்பங்களை இச்சித்தேனும், நிலையற்ற உயிர் வாழ்வைப் பெரிதாகப் பாராட்டியேனும் மாற்றக்கூடாது. 'சிறிது சிறிதாக, படிப்படியாக ஞாயத்தை ஏற்படுத்திக் கொள்வோம்' என்னும் கோழை நிதானக் கட்சியாரின் மூடத்தனத்தை நாம் கைக்கொள்ளக்கூடாது. நமக்கு ஞாயம் வேண்டும். அதுவும் இந்த க்ஷணத்தில் வேண்டும்,

இங்ஙனம், 'பரிபூர்ண ஸமத்வ மில்லாத இடத்தி
ஆண் மக்களுடன் நாம் வாழமாட்டோம்' என்று சொ
தனுல், நமக்கு நம்முடைய புருஷர்களாலும் புரு
சமூகத்தாராலும் ஏற்படக்கூடிய கொடுமை
எத்தனையோயாயினும், எத்தன்மை யுடையனவாயினு
அவற்றுல் நமக்கு மரணமே நேரிடினும், நாம் அஞ்
கூடாது. ஸஹோதரிகளே! ஆறிலும் சாவு; நூறிலும் சா
தர்மத்துக்காக மடிகிறவர்களும் மடியத்தான் செய்கிறு
கள்; ஸாமான்ய ஜனங்களும் மடியத்தான் செய்கிருர்க
ஆதலால், ஸஹோதரிகளே, பெண் விடுதலைக்காக இந்
க்ஷணத்திலேயே தர்ம யுத்தம் தொடங்குங்கள். நா
வெற்றி பெறுவோம். நமக்கு மஹாசக்தி துணை செய்வா
வந்தே மாதரம்.

## 14. புனர் ஜன்மம்

[குறிப்பு : இக்கட்டுரையே பேசுகிறது. வேறு விளக்கம் தேவையில்லை. பாரதியார் நேர்மை யற்றவர்களை வன்மையாகக் கண்டிக்கிருர். பாம்பு, நாய் என்று சொல்லவும் தயங்கவில்லை.]

பாப புண்ணியங்களுக்கு இணங்க மானிடரி
கர்மத்தினுடைய பலனுக அடுத்த ஜன்மத்தில் உயர்ந்
பிறப்பேனும் தாழ்ந்த பிறப்பேனும் கிடைக்கும் என்ப
நமது தேசத்துப் பொதுநம்பிக்கை. பாவம் செய்யு
ஒருவனை, 'நீ அடுத்த ஜன்மம் மிருகமாகப் பிறப்பாய
என்றுல் அவனுடைய மனம் பதைக்கிறது. ஆனுல், இந்
ஜன்மத்திலேயே மனிதர்கள் தாம் மிருகங்களைப் போலிரு
பதைக் கவனிப்பது கிடையாது. ஒவ்வொரு நிமிஷத்திலே
யும் ஒருவன் நினைக்கும் நினைப்புகளும் செய்யும் செய்கை

ளும் அவன் பலவிதப் பிறவிகளை அடைவதற்குக் காரண ங்கின்றன. இந்த உலகத்திலேயே, இப்பொழுதே, ஒரே ரீரத்திலுள்ள ஒருவன் ஆயிரம் பிறவிகள் பிறந்து மடிகிறான். 'ஒவ்வொரு க்ஷணமும் ஒவ்வொருவனும் பிறந்து பிறந்து பிறந்து மடிகின்றான்; ஒவ்வொரு க்ஷணமும் ஒவ் வொருவனும் பிறந்து பிறந்து மாய்கிறான்' என்று கூறத் தகும். மிருகங்களைப் போன்ற மனிதர்களை நாம் பார்த்த தில்லையா? நம்மை நாம் கவனிக்குமிடத்து, எத்தனை விதமான மிருகங்களா யிருந்திருக்கிறோம் என்பது தெரியும். வஞ்சனையாலும், சூத்திரத்தாலும், சமயத்திற் கேற்பப் பலவிதக் கபடங்கள் செய்து ஜீவிப்பவன் நரிதானே? ஊக்க மில்லாமல் ஏதேனுமொன்றை நினைத்துக்கொண்டு மனஞ் சோர்ந்து தலைகவிழ்ந்து உட்கார்ந்திருப்பவன் தேவாங்கு. மறைந்திருந்து பிறருக்குத் தீங்கு செய்பவன் பாம்பு. காமதத்திலும், புகழிலும் விருப்பமில்லாமல், அற்ப சுகத்திலே மூழ்கிக் கிடப்பவன் பன்றி. சுயாதீனத்திலே இச்சையில்லாமல் பிறர்களுக்குப் பிரியமாக நடந்துகொண்டு அவர்கள் கொடுத்ததை வாங்கி வயிறு வளர்ப்பவன் நாய். கண்ட விஷயங்களிலெல்லாம் திடீர், திடீர் என்று கோப மடைகிறவன் வேட்டைநாய். காங்கிரஸ் சபையிலேயும் சேர்ந்து கொண்டு, ஆங்கிலேய அதிகாரிகளுக்கும் ஹிதமாக நடக்க வேண்டுமென்ற விருப்பமுடைய 'மேத்தா' கட்சியைச் சேர்ந்தவன் வெளவால். அறிவுத் துணிவால் பெரும் பொருள்களைத் தேர்ந்து கொள்ளாமல், முன்னோர் சாஸ்திரங்களைத் திரும்பத் திரும்ப வாயினால் சொல்லிக் கொண்டிருப்பவன் கிளிப்பிள்ளை. பிறர் தன்னை எவ்வளவு அவமதிப்பாக நடத்தியபோதிலும் அவன் அக்கிரமத்தை நிறுத்த முடியாமல் தனது மந்த குணத்தால் பொறுத்துக் கொண்டிருப்பவன் கழுதை. வீண் மினுக்கு மினுக்கி டம்பம் பாராட்டுகிறவன் வான்

கோழி. கல்வியறிவில்லாதவனை மிருகக் கூட்டத்திலேயு
சேர்க்கலாகாது, அவன் தூண். தான் சிரமப்படாம
பிறர்சொத்தை அபகரித்து உண்ணுபவன் கழுகு. ஓர் நவீ
உண்மை வரும் போது, அதை ஆவலோடு அங்கீகரித்து
கொள்ளாமல் வெறுப்படைகிறவன் (வெளிச்சத்தை
கொண்டு அஞ்சும்) ஆந்தை.

ஒவ்வொரு நிமிஷமும் சத்தியமே பேசித் தர்மத்தை
ஆசரித்துப் பரமார்த்தத்தை அறிய முயலுகிறவனே
மனிதனென்றும் தேவனென்றும் சொல்வதற்குரியவ
வான். மிருக ஜன்மங்களை நாம் ஒவ்வொருவரும் க்ஷண
தோறும் நீக்க முயலவேண்டும்.

## 15. உலக வாழ்க்கையின் பயன்

[குறிப்பு : நீதி, ஸமாதானம், ஸமத்துவம், அன்பு இவற்றாலேயே தீராத தைரியமும், தீராத இன்பமும் நிலைபெறும் என்பதை எத்தனை உத்திகளைக் கொண்டு விளக்குகிறார் பாருங்கள்.]

உலக வாழ்க்கையில் மானிடராலும் மற்ற உயி
களாலும் விரும்பப்படும் மிகச்சிறந்த பயன் யா
எப்போதும் நீங்காத, எப்போதும் மாறாத, எப்போது
குறையாத இன்பமெய்தி வாழ்தல்.

இவ்வகையான இன்பத்தை எய்தும் பொரு
டாகவே மானிடர் கல்வி கற்பதும், பொருள் சே
பதும், தவங்கள் செய்தலும், அரசாள்வதும், க
செய்தலும், கொலை செய்வதும், பேசுதலும் சி
தலும், ஆடுதலும், பாடுதலும், அழுதலும், உழுதலும்

...த் தொழிலும் செய்கிறார்கள், மனிதர் மட்டுமே ...ன் மற்ற எல்லா உயிர்களும் தாம் செய்யும் எல்லாத் தொழில்களையும் மேற்கூறிய ஒரே நோக்கத்தோடுதான் செய்கின்றன.

ஆயினும், இதுவரை மேற்படி நித்யானந்த நிலையை ...ந்த உயிரும் எய்தவில்லையென்பது தெளிவு. உலகத்தில் ...ரிக்க முடியாத துக்கம் நிறைந்திருப்பதே, புத்தர் ...டதாகக் கூறப்படும் நான்கு உண்மைகளில், முதலா ...து. இங்ஙனம் நீராத துன்பம் இருப்பதற்குக் காரணம் ...வோர் உயிரும் தன்னையேனும் பிற உயிர்களையேனும் ...ர்த்தும் கருதியும் ஓயாமல் அருவருப்பும் பயமும் அடை...ன்றன வாதலேயாம்.

இங்ஙனம் ஒவ்வொரு உயிர்க்கும் தன்னிடத்தும் பிற ...ரிகளிடத்தும் பொருள்களிடத்தும் தீராத சகிப்பின்மை ... பயமும், வெறுப்பும், கவலையும் ஏற்படுவதற்குக் ...ரணம், அநாதி காலந்தொட்டு ஜீவர்களுக்குள்ளே ...ழ்ந்துவரும் ஓயாத போராட்டத்தால் ஏற்பட்ட பழக்கந் ...ிர வேறொன்றுமில்லை.

எல்லா வஸ்துக்களும் எல்லாக் குணங்களும் ஒன்றென் ...ம் வேதாந்த ஞானத்தால் இந்த அஞ்ஞானப் பழக்கத்தை ...கவேண்டும். மேற்படி ஞானம், உலகம் தோன்றிய கால ...லாக, எத்தனையோ பண்டிதர்களின் மனத்திலும் ...களின் மனத்திலும் உதித்திருக்கிறது; எத்தனையோ ...ரடிக்கணக்கான பாமரர் மனத்துள் அவை அழுத் ...மல், வாயினால் பிதற்றிக்கொண்டு வந்திருக்கிறார்கள்.

ஆயினும், பண்டிதர்களுக்கும் பாமரர்களுக்கும் ...ங்கே அந்த ஞானத்தை நித்ய அநுபவத்தில் கொண்டு முடியாதபடி, பழைய அஞ்ஞானம் தடுக்கிறது.

'அஞ்ஞானத்தை வென்றால், தீராத இன்ப நிலையே வாழலாம்' என்று சாஸ்திரம், யுக்தி, அநுபவம்—மூன்று பிரமாணங்களாலும் விளங்குகிறது. எனினும், அஞ்ஞானப் பிசாசையும் அதன் குட்டிகளாகிய காம குரோதம், மோஹம், லோபம், மதம், மாத்ஸர்யம் என் ஆறு யமதூதர்களையும் வெல்ல மனிதனுடைய சித் இடங்கொடுக்க மாட்டேன் என்கிறது. நாயைக் கு பாட்டி நல்ல உணவளித்து நடு வீட்டில் வைத்தால், மறுபடியும் அசுத்த உணவை விரும்பி வாலைக் குழைத் கொண்டு ஓடத்தான் செய்கிறது. எத்தனை புதிய இன களைக் காட்டியபோதிலும், மனம் அவற்றில் நிலைபெறா மீண்டும் ஏதேனும் ஒரு துன்பக் குழியிலே கண்ணை திறந்துகொண்டு போய் விழுந்து தத்தளிக்கத் தொட கிறது.

மனம் கலங்கிய மாத்திரத்தில் புத்தி கல போய்விடுகிறது. ஆகையால், புத்தியை நம்பி எவ மனத்தைக் கலங்க விடாதிருக்கக் கடவன். மனத் கலங்கவிடாமல் பயிற்சி செய்வதே எல்லாவித யே களிலும் சிறந்த யோகமாகும். மனம் தவறி ஒரு து குழியில் போய் விழுங்காலத்தில், புத்தி சும்மா பார் கொண்டு நிற்கிறது. ஒரு வேளை புத்தி தடுத்தபோதி அதை மனம் கவனிப்பதில்லை. புத்தியை மீறி உழலும் மனத்துக்கு இருக்கிறது.

ஆதலால், மனம் துன்பத்தில் நழுவி விழத்தொ கும்போது, அதை உறுதி அல்லது தைர்யம் எ கடிவாளத்தால் பிடித்து நிறுத்திப் பழகுவதே சரி யோகப் பயிற்சியாம். இந்தப் பயிற்சி ஏற்படுத் கொள்ளுமாறு சிலர் உலகத்தைவிட்டு நீங்கித் தனிய களிலிருந்து கண்ணை மூடிக்கொண்டு பழகுகிறார்கள்.

ந மூச்சைப் பல இடங்களில் கட்டியும் அவயவங்களைப் வாறு திருப்பியும் பழகுகிறார்கள்; தனியே இருந்து ஜபம் ரணிப் பார்க்கிறார்கள்.

இதிலெல்லாம் இது வேகாது. உலகத்தாருடன் கூடி, லா வகைகளிலும் மற்ற உலகத்தாரைப் போலவே தொழில் செய்துகொண்டு உலக விவகாரங்களை நடத்திய ண்ணமாகவே சஞ்சலத்துக்கு இடங்கொடாதபடி தன் னத்தைக் கட்டக்கூடிய திறமையே பயன் தரக்கூடியது. ற்ற முயற்சிகளெல்லாம் வீண்.

நீதி, ஸமாதானம், ஸமத்துவம், அன்பு இவற்றாலேயே வ்வுலகத்தில் தீராத தைரியமும், அதனாலே தீராத ன்பமும் எய்தலாம். வேறு வழியில்லை.

## 16. உழைப்பு

[குறிப்பு : உழைப்பை வலியுறுத்துகிற மற்றொரு கட்டுரை. பாட்டுப்பாடிக் கொண்டு நிலத்தை உழு. அழுதுகொண்டு உழுதால் உழவுக்குக் கெடுதி, உனக்கும் இன்பமில்லை. உழைப்பு எப்போதும் உண்டு என்கிறார் பாரதியார்.]

ராமகிருஷ்ணர் 'நீயுண்டு, நீயுண்டு, நீயுண்டு, ானில்லை, நானில்லை, நானில்லை' என்று ஜபம் பண்ணினார். வர் சோம்பேறியா? ஆஹா! ராமகிருஷ்ணர் விவேகானந் ரை உண்டாக்கினார். விவேகானந்தரோ புதிய பாரத தசத்தை உண்டாக்கினவர்களிலே முதல் வகுப்பைச் சேர்ந்தவர்.

'உழைப்பு எப்போதும் உண்டு. தெய்வமே சரணெ
றிருப்போர் உள்ளத்திலே தாபமில்லாமல் உழைப்பார்க
ஆனபடியால், அவர்களுடைய செய்கைக்கு வலிை
அதிகம், வேகம் அதிகம், உயர்வு அதிகம், அழகு அதிக
பயன் அதிகம்' என்பது சொல்லாமலே விளங்கும்.

உழைப்பு எப்போதுமுண்டு. தெய்வத்தின் தலையிே
சுமையைப் போட்டுவிட்டு, நாம் கவலை, பயம் என்
இரண்டு நாய்களுக்கும் உள்ளத்தை இரையாக்காமல்
ஸந்தோஷமாகப் பாட்டுப் பாடிக்கொண்டு நிலத்ை
உழுவது நல்லது. அழுதுகொண்டே உழுதால் உழவுக்கு
கெடுதி; மனத்துக்கு ஸந்தோஷமில்லை; மடத்தன்மைதவ
வேறொன்றுமில்லை.

உழைப்பு எப்போதும் உண்டு. இதிலே நான் என்
பாரத்தை நீக்கிவிட்டு உழைத்தால், வேலை கிறுகிறுவென்
வேகமாகவும் பிழையில்லாமலும் நடக்கும். தன்னை
தூக்கித் தலையிலே வைத்துக் கொண்டு வேலைசெய்தா
வேலை குழம்பும்.

தன்னை மறந்து, வித்தையின் இன்பத்திலே தன் புத்
முழுவதையும் செலுத்தி ஆடும் தாசி நன்றாக ஆடுவாள்
'நாம் அழகோ அழகில்லையோ? வகுப்பு சரியாயிருக்கிறதே
இல்லையோ? நெற்றிப் பொட்டு நேரே விழுந்திருக்கிறதே
என்னவோ? பாதி ஆட்டத்தில் முன்னொரு முறை வயிற்
வலி வந்ததுபோல் வந்துவிடுமோ என்னமோ?' என்று த
சித்தம் குழம்பிப்போயிருந்தால், ஆட்டம் நேரே வராத

தன்னை மறந்து சகல உலகினையும்
மன்னி நிதங்காக்கு மகாசக்தி—அன்னை
அவளே துணையென் றமைவெய்தி நெஞ்சம்
துவளா திருத்தல் சுகம்.

நெஞ்சிற் கவலை நிதமும் பயிராக்கி
அஞ்சி உயிர்வாழ்தல் அறியாமை—தஞ்சமென
வையமெலாங் காக்கு மகாசக்தி நல்லருளை
ஐயமறப் பற்றல் அறிவு.

வையகத்துக் கில்லை மனமே நினக்கு நலம்
செய்யக் கருதியிவை செப்புவேன்—பொய்யில்லை
எல்லா.மளிக்கும் இறை நமையுங் காக்குமெனும்
சொல்லால் அழியும் துயர்.

எண்ணிற் கடங்காமல் எங்கும் பரந்தனவாம்
விண்ணிற் சுடர்கின்ற மீனையெலாம்—பண்ணியதோர்
சக்தியே நம்மைச் சமைத்தது காண் நூறாண்டு
பக்தியுடன் வாழும் படிக்கு.

## 17. வாசக ஞானம்

[குறிப்பு : உண்மையென்று ஏதாவது ஒன்றை நமது அறிவைக் கொண்டு நன்கு ஆராய்ந்து தெளிதல் வேண்டும். பிறகு அதை நடைமுறையிற் கொண்டுவர வேண்டும். இதற்குத் துணிச்சல் வேண்டும். இந்தத் துணிச்சல் இல்லாதபோது அறிவினால் எவ்விதமான பயனும் இல்லாமற் போய்விடுகிறது.

ஆனால் அறிவைக் கொண்டு தெளிந்த பலவற்றை நடைமுறையில் எவ்வாறு மக்கள் கைக்கொள்ளத் தவறி விடுகிறார்கள் என்பதை இக்கட்டுரையில் எடுத்துக்காட்டுகிறார். பெண்கள் உரிமை, ஜாதி வேறுபாடுகள் என்று பலவற்றில் நாம் அறிவுபூர்வமாக ஏற்றுக் கொண்ட

வற்றைச் செய்கைகளிலே நடத்திக் காட்டத் தவறிவிடுகிறோம் என்பதைப் பாரதியார் நன்கு எடுத்துக் காட்டுகிறார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் பாரதியாரும் பெண் ணுரிமையும் என்ற எனது முந்திய நூலில் குறித்துள்ளவற்றை நினைவு கூர்தல் நல்லது. புதுமைப் பெண், பெண்கள் விடுதலைக் கும்மி முதலிய கவிதைகளையும் நினைவு கூர்க.

தைர்யத்தோடு கோடிக்கணக்கில் ஒரு புது நெறி நாட்டுவோம் என்று பாரதியார் அழைக் கிறார். தைர்யம், அன்பு இவையே தாரக மந்திர மாகக் கொள்வோம்; கலி அழிந்துவிடும் என்று முழங்குகிறார் பாரதியார்.]

வியாபாரம், கைத்தொழில், ராஜாங்கச் சீர்திருத்த ஜன சமூகத் திருத்தம் முதலிய லௌகிக விவகாரங்க எல்லாவற்றிலும், மனிதர் ஏறக்குறைய எல்லா திட்டங்க யும் உணர்ந்து முடித்துவிட்டனர். ஒரு துறை அல்லது ஒ இலாக்காவைப் பற்றிய ஸூக்ஷ்ம தந்திரங்களை மற்றெ துறையிற் பயிற்சி கொண்டோர் அறியாதிருக்கலாம் ஆனால், அந்தந்த நெறியிற் தக்க பயிற்சி கொண்ட புத் மான்களுக்கு அதனை யதனைப் பற்றிய நுட்பங்கள் முழு யும் ஏறக்குறைய நன்றாகத் தெரியும்.

பொதுவாகக் கூறுமிடத்தே, மனித ஜாதியார் அறி சம்பந்தப்பட்டமட்டில் மஹா ஸூக்ஷ்மமான பல ஸத்யங்களை யெல்லாம் கண்டுபிடித்து முடித்துவிட்டன ஆனால் அறிவுக்குத் தெரிந்ததை மனம் மறவாதே பயிற் செய்ய வலிமையற்றதாய் நிற்கிறது. அறிவு சுத்தமா

பின்னரும், சித்தசுத்தி ஏற்பட வழியில்லாமல் இருக்கிறது. எனவே, அறிவினால் எட்டிய உண்மைகளை மனிதர் ஒழுக்கத்திலே நடத்திக் காட்டுதல் பெருங்கஷ்டமாக முடிந்திருக்கிறது. ஆத்மஞானத்தின் சம்பந்தமாக கவனிக்குமிடத்தே, இந்த உண்மையைத் தாயுமானவர்,

> "வாசக ஞானத்தினால் வருமோ ஸுகம் பாழ்த்த
> பூசலென்று போமோ புகலாய் பராபரமே"

என்ற கண்ணியில் வெளியிட்டிருக்கிறார்.

இதன் பொருள், "வெறுமே வாக்களவாக ஏற்பட்டிருக்கும் ஞானத்தினால் ஆனந்தமெய்த முடியவில்லையே? என் செய்வோம்? பாழ்பட்ட மனம் ஓயாமல் பூசலிட்டுக் கொண்டிருக்கிறதே? இந்தப் பூசல் எப்போது தீரும்? கடவுளே, நீ அதனைத் தெரிவிப்பாய்" என்பதாம். இதே உண்மையை உலகநீதி விஷயத்தில் ஏற்கும்படி, திருவள்ளுவர்,

> "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
> சொல்லிய வண்ணம் செயல்"

என்ற குறளால் உணர்த்துகிறார்.

இதன் பொருள் "வாயினால் ஒரு தர்மத்தை எடுத்துச் சொல்லுதல் யாவர்க்கும் சுலபமாக ஏற்பட்டிருக்கிறது. ஆனால், அந்தச் சொல்லின்படி நடத்தல் மிகவும் துர்லபம்" என்பது.

திருஷ்டாந்தமாக, 'ஆண்களும் பெண்களும் ஸமானமான ஆத்ம இயல்பும் ஆத்மகுணங்களும் உடையோராதலால், பெண்களை எவ்வகையிலும் இழிந்தவராகக் கருதுதல் பிழை' என்ற கொள்கை ஐரோப்பாவிற் படிப்பாளிகளுக்குள்ளே மிகவும் ஸாதாரணமாகப் பரவியிருக்கிறது

எப்போதும் ஏறிச் செல்லவேண்டும்; அதுவே பெரிது. (ப்ளூதார்க்.)

விருப்பமும் நம்பிக்கையும் தூண்டுமிடத்து மனிதன் உயிருக்கு அஞ்சிப் பின் வாங்கலாகாது. பாதையில் ஒரு க்ஷணங்கூடச் சோம்பியிருக்கலாகாது. தாமதம் செய்பவன் பாதையினின்றும் வலிந்து புறத்தே தள்ளப் படுவான். (பரீத்-உத்தின்-அத்தர்.)

உண்மையை நாடி உழைப்பவன், இடையே சில விசேஷ சித்திகள் பெற்றவுடன் தடைப்பட்டு நில்லாமல், அதற்கு அப்பாலும் முயற்சி செய்தால் கடைசியாக நித்திய ஞானமாகிய செல்வத்தைப் பெறுவான். (ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.)

நான் என்னை உணர்ந்தவனாகக் கருதவில்லை. ஆனால் ஒரு காரியம் செய்கிறேன். கடந்து போனவற்றை யெல்லாம் மறந்து, முன்னே நிற்பவற்றை நாடுகிறேன். பரிசு பெறும் பொருட்டுக் குறியை நோக்கி விரைகின்றேன். (பைபில் : பிலிப்பியர்.)

விடா முயற்சியும் உறுதியும் உடையவருக்கு எதுவும் அரிதில்லை. (லுன்—யூ)

பெறுதற் கரியவற்றைப் பெறவேண்டி அறிஞன் விடாமுயற்சியைக் கைக்கொள்ளுகிறான். (வஓ—த்ஸே)

ஊக்கத்துடன் தேடுகிறவன் காண்பான். (மஹா—உல்லா.)

சிலர் கல்வி பழகமாட்டார். சிலர் பழகியும் தேற மாட்டார். சிலர் கேள்வி கேட்க மாட்டார். சிலர் கேட்டும் விடைப்பொருள் தெரிந்துகொள்ள மாட்டார். இவர்களெல்லாம் மனஞ் சோர்ந்து போக வேண்டாம். சிலர் ஏதையும் தெளிவுறக் காணமாட்டார். சிலர்

தெளிந்தும் கலங்குவார். இவர்கள் மனஞ் சோர வேண்டாம். சிலர் அப்யாஸம் செய்வதில்லை. சிலர் செய்தாலும் உறுதி யடைவதில்லை. இவர்கள் மனஞ் சோர வேண்டாம். விடாமுயற்சி ஒன்றிருந்தாற் போதும்; பிறன் ஓரடியிற் செய்வதை இவர்கள் நூறடியிற் செய்வார்கள். பிறன் பத்தடியிற் செய்வதை இவர்கள் ஆயிரம் அடியிற் செய்துவிடுவார்கள். இந்த விடாமுயற்சி விதிப்படி நடப்பவன் எத்தனை மூடனாயினும் மேதாவியாய் விடுவான்; எத்தனை பலஹீனனாயினும் வலிமை பெற்று விடுவான். (கன்யூஷியஸ்.)

காலத்தாலும் பொறுமையாலும் முசுக்கட்டை இலை பட்டாய் விடுகிறது. (பாரசீகப் பழமொழி.)

உடம்பைப் போல உணர்வும் தான் ஏற்படுத்திக் கொள்ள விரும்பும் வழக்கத்தைப் பழக்கத்தினால் அடைகிறது. (ஸொக்ராதெஸ்.)

ஆத்ம சுத்தியாகத் தொழிலைச் செய்யுங்கள். அதில் விழிப் போடிருங்கள். விடாமுயற்சி செய்யுங்கள். சிந்தனையோடிருங்கள். உங்கள் விடுதலையிலே கருத்தைச் செலுத்துங்கள். (மஹா பரி நிர்வாண ஸூக்தம்.)

கடைசிவரை எவன் பொறுத்திருப்பானோ அவன் காக்கப்படுவான். (பைபில் : மத்தேயு.)

விடாமுயற்சியாலே ஆத்ம வுடைமை பெறுவீர். (பைபில் : லூக்.)

சிறுக விதைத்தவன் சிறுக அறுப்பான். பெருக விதைத்தவன் பெருக அறுப்பான். (பைபில் : கொரிந்தியார்.)

தேவ யாத்திரை செய்வோன் எப்போதும் அதைரியப் படலாகாது. இஷ்டதேவதையின் அழகை ஒரு லக்ஷ வருஷம் பாடுபட்டுங் காணுவிடின் அப்போதும் அதைரியப் படலாகாது. (பஹா உல்லா.)

எந்த நாளும் அதைரியப்படாமல் இருப்பவனே பெருமை யடைந்து நித்தியானந்தத்தை உண்ணுகிறான். (மஹாபாரதம்)

நியாயமுள்ள மனிதன் ஏழுதரம் விழுந்தும் மறுபடி எழுகிறான். (பைபில் : பழமொழி.)

நித்யப் பொருளைக் காணும் பொருட்டாக நீ செய்யும் முதன் முயற்சி பயன்படாவிட்டால், அதனால் தைரியத்தை இழந்து விடாதே. விடாமுயற்சி செய்ய தெய்வத்தின் அருள் பெறுவாய். (ராமகிருஷ்ண பரமஹம்ஸர்)

## உடம்பைப் பேணுதல்

சீன தேசத்து ஞானி 'யாகத்ஸ்உங்—த்ஸே' என்பவர் சொல்கிறார் :—"மண்ணுலகத்தையும், வானுலகத்தையும் சேர்த்ததோர் விம்பம்; அதன் பெயர் உடம்பு. அதனைத் தெய்வம் உன் வசம் கொடுத்திருக்கிறது. உன் காவலிலே யகப்பட்டிருக்கும் மண்ணை விண்ணுடன் இசைத்து (ஸம்மேளப்படுத்தி) நடத்துவதே உயிர் வாழ்க்கையென்று சொல்லப்படும்."

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொல்லுகிறார்:—"உயிரும் உடம்பும் உள்ளே குணம், வெளியே குறி."

'எபிக்தெதுஸ்' என்ற கிரேக்க ஞானி சொல்லுகிறார்:— "ஆத்ம சக்தியால் ஆத்மாவுக்கு விளையும் பயன் சரீரசக்தி யால் உடலுக்கு உண்டாகும்."

ராமகிருஷ்ண பரமஹம்ஸர்:—" தர்மிஷ்டர் உடம்பைப் போற்ற வேண்டும். அது ஆத்மாவின் கோயில். சத்தியப் பொருள் அதனுள்ளே விளங்குகிறது."

ஸ்வாமி விவேகானந்தர்:-"வலிமையுற, நோயின்றி உடம்பைக் காத்தல் அவசியம். உடம்பு மிகச் சிறந்த கருவி. அதனிலும் சிறந்தகருவி உன்னிடமில்லை. ஆதலால், அதை வலிதாக, நோயற்றதாக வைத்துக்கொள். உனது உடம்பு எஃகைப்போல் வலியதென்று பாவனை செய்துகொள். மெலிந்தோருக்கு விடுதலை யில்லை; மெலிவையெல்லாம் துரத்திவிடு. உடம்பு வலிதென்று அதனிடம் சொல்லு. அறிவு வலிதென்று அறிவினிடம் சொல்லு. உன்னிடத்திலே நீ எல்லையற்ற திடமும் நம்பிக்கையும் கொண்டிரு."

"மஹாலக்கம்' என்ற பௌத்த நூல் சொல்லுகிறது: உடன் பிறந்தோரே! இரண்டுவித மிகையு மில்லாதிருப்போனே விடுதலை பெறுவான். எப்போதும் காமாதி இன்பங்களை நாடுதல் ஒரு மிகை; இஃதிழிந்தது, சிறுமை, மிருகத்தன்மை, ஆபத்து. இந்த வழியிலே பாமரர் செல்லுகிறார்கள். மற்றொரு மிகையாவது உடம்பை மிதமிஞ்சிய விரத முதலியவற்றால் வருந்தச் செய்தல். இது துன்பம்; இது வீண். புத்த பகவான் கூறியது, மேற் கூறிய சந்துகளிரண்டினும் வேறான வழி; அது அறிவைத் திறப்பது; தெளிவு தருவது; விடுதலைக்கும் ஞானத்துக்கும் நிறைவுக்கும் வழி காட்டுவது."

யோக ஸூத்ரங்களின் ஆசிரியராகிய பதஞ்ஜலி சொல்லுகிறார்:—வலிமைகளிலே மதியை நிறுத்தி ஸம்யமம் (ஆழ்ந்த தியானம்) செய்தால் யானையின் பலம் முதலியன கை கூடும்."

தமிழ்ப் பழமொழி:—"சுவரிருந்தாலன்றோ சித்தி மெழுதலாம்?" [கருத்து:—வெயர்வை சிந்தும்படி நாள் தோறும் உடலை உழைக்கவேண்டும். நன்றாகப் பசித்த பிறகு போஜனம் செய்யவேண்டும். மனதிலே சந்தோஷம் வேண்டும். இவற்றாலே ஒருவன் உடம்பைக் காத்தால் ஒழிய, தர்மம் நடக்காது.]

## தர்க்கம்

"விரைந்துகேட்க; மெல்லச் சொல்லுக." (பைபில்)

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் :—பிறர் குணதோஷங் களைப் பற்றித் தர்க்கிப்பதிலே பொழுது செலவிடுவோன் பொழுதை வீணே கழிக்கிறான். தன்னைப் பற்றிச் சிந்தனை செய்தாற் பயனுண்டு. ஈசனைப் பற்றிச் சிந்தனை செய்தாற் பயனுண்டு. பிறரைப் பற்றி யோசித்தால் வீண்."

'ஹெர்மஸ்' என்ற புராதன மிசிர (எகிப்து) தேசத்து ஞானி:—"மகனே, விவாகத்திலே நேரங் கழித்தல் நிழலுடனே போராடுவதற்கு நிகராகும்."

'ஸொக்ராதெஸ்' என்ற கிரேக்க ஞானி:—"அறியா தார் பேச்சை நிறுத்தினாற் கலக மில்லை."

ராமகிருஷ்ண பரமஹம்ஸர்:—"வாதாடுவதனால் பிறன் தனது பிழைகளை அறிந்து கொள்ளும்படி செய்யமுடியாது. தெய்வத்தின் திருவருள் ஏற்படும்போது, அவனவன் பிழைகளை அவனவன் தெரிந்து கொள்ளுவான்."

திருவள்ளுவர்:—

"யாகாவா ராயினும் நாகாக்க"
"சொல்லிற் பயனுடைய சொல்லுக"

# 28. ஜப்பான் தொழிற்கல்வி

12 பிப்ரவரி 1916

[குறிப்பு : "சென்றிடுவீர் எட்டுத் திக்கும்; கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்" என்று, தமிழ்த்தாய் தன்மக்களை நோக்கிக் கூறுவதாகப் பாரதியார் எழுதியுள்ளது அனைவருக்கும் தெரிந்திருக்கும்.

இந்திய நாட்டுப் பெண்கள், வெளிநாடுகளுக்குச் சென்று புகழ்பெற்றுத் திரும்பவேண்டும் என்று, கவிஞர் ஆசைப்படுகிறார்.

ஆசிய நாடுகளிலே, அனைவருடைய கருத்தையும் கவர்ந்தது ஜப்பான் ஆகும். அந்த நாட்டினர் மேல் நாடுகளுக்குச் சென்று, பல கலைகளையும் கற்றுத் தேர்ந்து, பின் தமது நாட்டிற்குத் திரும்பி வந்து, தமதுநாட்டை மேலை நாடுகள் போலத் தொழில்வளம் சிறந்ததாகச் செய்யத் தீவிரமாக முனைந்தனர். உலகமே வியக்கும் வகையில் ஜப்பான் முன்னேற்றம் அடைந்து ஓங்கி நிற்கின்றது. பல தொழில்களில் மேலைநாடுகளையும் அது மிஞ்சியுள்ளது.

ஆகவே ஜப்பானுக்கு பாரதநாட்டு இளைஞர்கள் சென்று பயிற்சிபெற்று வரவேண்டும் என்று பாரதியார் விரும்புகின்றார். இதே விருப்பத்தை சுவாமி விவேகாநந்தரும் தெரிவித்துள்ளார். நமது நாடு இவ்வாறு சென்று முன்னேறுவதற்கான வழிகளை மேற்கொள்ள வேண்டியது அவசரத்திலும் அவசரம் என்று, கவிஞர் இக் கட்டுரைப் பகுதியில் கூறுகின்றார்.]

தெளிந்த அறிவும் இடைவிடாத முயற்சியும் இருந்தால் சக்தியுண்டாகும். தெளிந்த அறிவென்பது இரண்டு வகைப்படும்—ஆத்ம ஞானம், லௌகிக ஞானம் என. ஆத்ம ஞானத்தில் நமது ஜாதி சிறந்தது. லௌகிக ஞானத்தில் நம்மைக்காட்டிலும் வேறு பல தேசத்தார் மேன்மை யடைந்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட தேசங்களில் ஜப்பான் ஒன்று. புத்தகங்களாலும், பத்திரிகைகளாலும், யாத்திரைகளாலும் நாம் ஜப்பான் விஷயங்களை நன்றாகத் தெரிந்து கொள்ளுதல் பயன்படும். கூடியவரை பிள்ளைகளை ஜப்பானுக்கு அனுப்பிப் பலவிதமான தொழில்களும் சாஸ்திரங்களும் கற்றுக் கொண்டு வரும்படி செய்வதே பிரதான உபாயமாகும். தொழிற்கல்வியிலும் லௌகிக சாஸ்திரப் பயிற்சியிலும் நாம் மற்ற ஜாதியாருக்கு ஸமானமாக முயலுதல் அவசரத்திலும் அவசரம்.

## 29. ஹிந்து மகம்மதிய ஒற்றுமை

*8 மார்ச் 1916*

[குறிப்பு : இத் தேதியில் சுதேசமித்திரனில் வெளியான "பல" என்ற கட்டுரையில், இது ஒரு பகுதியாகும். இந்துக்களும் இஸ்லாமியரும் பரஸ்பரம் அன்பு பூண்டு வாழவேண்டும் என்பதைப் பாரதியார் பல இடங்களில் வற்புறுத்திக் கூறுவதை நாம் காண்கிறோம். சிவாஜி தன் சைன்யத்தை நோக்கி உரைப்பதாக வரும் வீரவுணர்ச்சிமிக்க பாடலில், மகமதியருக்கு விரோதமாக வந்துள்ள வரிகளுக்கு, அவரே 1906 நவம்பர் 17 ஆம் தேதி, இந்தியா வாரஇதழில் எழுதியுள்ள விளக்கத்தை ஆழ்ந்து நோக்கவேண்டும்.

'இந்தச் செய்யுளிலே நமது மகமதிய ஸஹோதரர்களுக்கு விரோதமாக சில வசனங்கள் ப்ரயோகிக்க நேர்ந்திருப்பது பற்றி விசனமடை கின்றோம். இக்காலத்து மகமதியர்கள் பாரத பூமியின் சொந்தப் புத்திரர்களென்பதையும், ஹிந்துக்களும் மகமதியர்களும் ஒருதாய் வயிற்றுக் குழந்தைகள் போல நடந்துகொள்ள வேண்டும் என்பதையும் பலமுறை வற்புறுத்தியிருக்கிறோம். என்ற போதிலும், சிவாஜி மஹாராஜா காலத்தில் ஹிந்துக்களுக்கும், முகமதியர்களுக்கும் விரோத மிருந்தபடியால், அவர்களைப்பற்றி மஹாராஜா சிவாஜி சில கோபமான வார்த்தைகள் சொல்லி யிருப்பது வியப்பாக மாட்டாது. ஷெ செய்யுளில் மகமதியர்களைப்பற்றி வந்திருக்கும் பிரஸ்தாபங் களில் வீர ரஸத்தை மட்டும் கவனிக்கவேண்டுமே யல்லாமல், மகமதிய நண்பர்கள் தமது விஷயத் தில் உதாஸீனம் இருப்பதாக நினைக்கக் கூடாது என்று கேட்டுக் கொள்கிறோம்.'' இந்த விளக்கம் பாரதியார் கருத்தை நன்கு காட்டுகிறது.

தாயின் மணிக்கொடி பாரீர்

என்ற பாடலிலும்,

இந்திரன் வச்சிரம் ஓர்பால்—அதில்
எங்கள் துருக்கர் இளம்பிறை ஓர்பால்

என்று வரும் வரிகளில், 'எங்கள் துருக்கர்' என்ற சொற் பிரயோகத்தையும் ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

இந்துக்களும் இஸ்லாமியரும் சேர்ந்து வாழ வேண்டும் என்று கவிஞர் வற்புறுத்துகிறார்.

இல்லாவிட்டால் நாடு துண்டாடப்படும் என்பதை அவருடைய நுண்ணிய உள்ளுணர் கூறியிருக்க வேண்டும்.

இன்று, நாட்டில் பிரிவினை ஏற்பட்டது மறுக்க முடியாத வரலாருகப் போய் விட்டது இனி இதை மாற்ற முடியாது.

ஆனால், இன்றைய சுதந்திர பாரதத்தில் வாழும் கோடிக்கணக்கான இந்துக்களும் இஸ்லாமியரும், சென்று போன நிகழ்ச்சிகளை மறந்து, ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகள் போல வாழவேண்டும். இதுவே கவிஞருக்கு நாடு செய்யக்கூடிய நன்றியாகும்.

20-6-1920 அன்று பாரதியார் பொட்டல் புதூரிலே "இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை என்ற தலைப்பில் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரத்தையும் நினைவுகூர்தல் தகும்.]

இந்த விஷயத்தைப் பற்றி ஓங்கோல் என்ற வக்கீல் வேலை பார்க்கும் ஸ்ரீ நாராயணசாஸ்கிரி என 'ஹிந்து' பத்திரிகைக்கு ஒரு கடிதம் எழுதியிருக் ஹிந்து—மகம்மதியருக்கிடைய பரஸ்பர மதிப்பும் அ அதிகப்படும்படி செய்வதற்கு அவர் சில வழிகள் கூ கிருர்.

அவற்றுள் முக்கியமானவை பின் வருமாறு :

1. ஹிந்துக்களிலே சிலர் மஹம்மதிய வேத ரங்களைப் படித்து அவற்றிலே தேர்ச்சி பெறவேண்டு

2. அங்ஙனமே, மஹம்மதியர்களில் சிலர் கிருதம் படித்து, ஹிந்துக்களுடைய வேத சாஸ்தி அறிந்துகொள்ள வேண்டும்.

ஹிந்துக்களுடைய மனத்திலே மஹம்மதியர் தேசத்தார் என்பதும், இஷ்ட தேவதை வேருக ...தைப்பற்றி அவர்களை மிலேச்சரென்று நினைப்பது பிழையென்பதும் நன்ருக ஞாபகமிருக்க வேண்டும்.

மஹம்மதியரும் அங்ஙனமே ஹிந்துக்களை காபிர் ...வாஸிகள்) என்று நினைப்பது பெரிய தவறென்று ...துகொள்ள வேண்டும்.

விவாகம் முதலிய சோபன காலங்களில் ஹிந்துக் ...ஹம்மதியரையும், மஹம்மதியர் ஹிந்துக்களையும் ...த்து உபசாரங்கள் செய்து தனியாக விருந்துகள் ... வைக்க வேண்டும். ஹிந்துக்களுக்குள்ளே ஜாதிக் ...ள் இருப்பதைப்பற்றி மஹம்மதியர் அருவருப்புக் ...ளக் கூடாது.

இங்ஙனம் ஸ்ரீ நாராயண சாஸ்திரி சொல்வதை ...லுள்ள ஹிந்து மஹம்மதியத் தலைவர்கள் கவனித்து ...த இடங்களிலேயே இயன்றவரை இரு திறத்தாருக் ...யும் ஸஹோதர உணர்ச்சி மேன்மேலும் பெருகி ...ற்கு வேலை செய்தால் தேசத்திற்கு அளவிறந்த ...மையுண்டாகும்.

## 30. புதிய உயிர்

*17 மார்ச் 1916*

[குறிப்பு : தெய்வபக்தி உண்மையாக ...க்குமானல் ஒருவனுக்கு நிச்சயமாக தைரியம் ...பட வேண்டும். இதுவே தெய்வபக்திக்குச் ...ந்த அடையாளம். தெய்வபக்தி கொண்டிருந்த ...யர்சுவாமிகள், "நாம் யார்க்கும் குடியல்லோம்;

நமனை யஞ்சோம்" என்று பாடுகின்ருர். வேறு பல அடியார்களும் இவரைப் போலவே பாடியுள்ளதை நாம் அறிவோம். ஆகவே, தெய்வ பக்திக்கு உரைகல் பயமின்மை.

நோயில்லாத உடம்பு வேண்டும் என்பதையும் பாரதியார் பல இடங்களிலே வற்புறுத்திக் கூறுவதை நாம் பார்க்கிறோம். 'உடலினை உறுதி செய்' என்பது கவிஞருடைய புதிய ஆத்திசூடி. 'வலிமையற்ற தோளினுய் போ போ' போ என்றும் பாரதியார் சீறுகின்ருர்.

பஞ்சத்தால் வாடுகின்ற மக்கள் பிணியால் உழல்வதைக் கண்டு அவர் மிகவும் வருந்துகிருர். தம்மையே இந்த நாடு உறுதியற்ற உடம்புடைய வராகச் செய்துவிட்டது. ஆனுல், அதற்காக அவர் யாரையும் நொந்து கொள்ளவில்லை.

1915 ஜூலை 2ஆம் தேதியில் அவர் எழுதிய "சித்தக் கடல்" குறிப்பைப் பாருங்கள். இது அவருடைய நாட்குறிப்பாகக் கொள்ளத்தக்கது; தொடர்ந்து எழுதவில்லையென்ருலும் கிடைத்த அளவுக்கு பாரதியாருடைய உள்ளப்போக்கை நன்கு புலப்படுத்துகிறது. அவர் சொல்லுகிருர் "புகையிலை வழக்கம் தொலைந்துவிட்டது பராசக்தியின் அருளால், இனிக் 'க்ஷவரத்' வழக்கம் ஏற்படவேணும், பராசக்தியின் அருளால். தோள் விம்மி வயிரம் போலாக வேணும். நெஞ்சு விரிந்து, திரண்டு, வலிமையுடையதாக வேணும் இரத்தம் மாசு தீர்ந்து, நோயின்றி நன்ருக ஓடி உடலை நன்கு காத்துக்கொண்டிருக்க வேணும்- பராசக்தியின் அருளால்." இப்படிப்பட்ட பக்

யில்லாவிட்டால், தேங்காய்க்கும் சர்க்கரைப் பொங்கலுக்கும் வீண் செலவு என்று கவிஞர் நகைச்சுவையோடு தெரிவிக்கிறார்.

இந்தக் கட்டுரையில்தான் செல்வர்களுடைய கடமையைத் தெளிவாகக் கூறுகின்றார். செல்வத்தைப் பகிர்ந்து கொடுத்துவிட்டு ஏழையாகிவிட வேண்டும் என்று அவர் சொல்லவில்லை. செல்வத்தைக்கொண்டு தொழிலைப்பெருக்கி அனைவருக்கும் சோறு போடும்படி அவர் பணிக்கிறார். அப்படிச் செய்யாத செல்வர் திருடர்கள் என்கிறார். அந்த ஊரில் வசிக்கும் குருக்களெல்லாம் பொய்யர்; அறிஞரெல்லாம் மூடர் என்று பச்சையாகவே எழுதி விடுகிறார்.

செல்வர்கள் டிரஸ்டிகளைப்போல வாழ்ந்து மற்றவர்களுக்கு அச்செல்வத்தால் விளையும் பயனை அடையும்படி செய்ய வேண்டும் என்ற காந்தியடிகளின் கருத்தை இந்த இடத்தில் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும்.]

"இவ்வுலகத்தில் மனிதனுக்கு ஏற்படக்கூடிய வலிமைகளையெல்லாம் நான் எனக்கு உண்டாக்கிக் கொள்வேன். மனிதனுக்கு வசப்படக்கூடிய செல்வங்களையெல்லாம் எனக்கு வசமாக்கிக் கொள்வேன். மனிதனுக்கு விளையக் கூடிய அறிவுகளையெல்லாம் என்னிடம் விளைவித்துக் கொள்வேன். மனிதனுக்கு கிடைக்கக்கூடிய இன்பங்களையெல்லாம் நான் தேடியனுபவிப்பேன்; ஸர்வ சக்தி பெறுவேன்."

என்று மனத்திலே ஒரு நிச்சயம் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். மாக்ஷிமை பெறுவதற்குத் தீராத விருப்பமும் துணிவுமே வழி. வேறு வழியில்லை. ஒருவன் தெய்வ பக்தி

யுள்ளவனாக யிருந்தாலும் அல்லது நாஸ்திகனாக இருந்தாலும் இந்த வழியை அனுசரிக்கலாம். நாஸ்திகன் அறியக் கடவது யாதெனில்,

'இவ்வுலகம் நமது தாய்' என்பது.

"உலகம் என்னிடம் பகைமையுடைய வஸ்துவில்லை உலகவனத்தில் நான் ஒரு மலர்...உலகம் என் அறிவுக்கு வசப்படுவதை அனுபவத்திலே கண்டிருக்கிறேன் உலகம் என்னிடம் அன்பு பூண்டது" இந்தச் செய்தியை ஸாமான்ய மதியுடைய எவனும் தன் உள்ளத்திலே பதியச் செய்துகொள்ளு தல் சிரமமில்லை. உலகம் நமக்குப் பிரதி கூலமாக இருந்தால், இங்கே மூன்று க்ஷணங்கள்கூட உயிருடன் வாழமுடியாது; "ஆனால், உலகம் நமக்கு நோய் உண்டாக்குகிறதே. இறுதியில் நம்மைக் கொன்று விடுகிறதே; இதை நம்மிடம் அன்பு பூண்டதாக எங்ஙனம் சொல்லலாம்?" என்று சிலர் ஆக்ஷேபிக்கலாம்.

உலகம் நம்முடைய தாய். அது நமக்குத் துன்பங்கள் விளைவிக்கும்போது நமக்குப் பாடங்கள் கற்றுக் கொடுக்கிறது. மூடக்குழந்தையைத் தாய் அடிப்பதுபோலவும் கட்டிபுறப்பட்ட சதையை ரணவைத்தியன் அறுத்தெறிவது போலவும், உலகம் நம்மைத் துன்பப்படுத்துகிறது. பெருந் துன்பமடைந்து அதனால் பரிசுத்த நிலைபெற்ற மேதாவிகள் எல்லோரும் இவ்வுண்மையைக் கண்டு கூறியிருக்கிறார்கள். திருஷ்டாந்தமாக, ஏழைத்தனம் பெரிய துன்பங்களிலே ஒன்றென்பது மனித ஜாதியின் பொது அநுபவம். எனினும் இதைக்குறித்து விக்டர் ஹ்யூகோ என்ற பிரான்ஸ் தேசத்து ஞானி யொருவர் பேசும்போது, "வறுமைத் தீயிலே ஸத்தில்லாத மனிதர் அழிந்து போகிறார்கள். ஸத்துடைய வர்கள் பத்தரை மாற்றுத் தங்கம்போல் தேறிச் சுடர்வீசி மாண்பு பெறுகிறார்கள்" என்று குறிப்பிடுகிறார்.

நோயிலே செத்தவன் போக, அதிலிருந்து நன்றாகத் தேறியெழுந்தவன் அறிவிருந்தால் முன்னைக்காட்டிலும் தான் அதிக சுகநிலையில் இருப்பதை உணர்ந்துகொள்வான். வெளிப்படையாகத் தோன்றும் நோய்க்குறிகள் எல்லாம் உடலுக்குள் இருக்கும் விஷத்தை வெளியேற்றிச் சுகந்தரும் பொருட்டாக இயற்கையால் செய்யப்படும் உபாயங்களே யாகுமென்று சிறந்த வைத்தியர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

ஸூக்ஷ்ம ஞானத்திலே நாட்டமில்லாத ஐரோப்பிய 'ஸயன்ஸ்'காரர்கூட, அடியிலே பூச்சி நிலையிலிருந்து உயிர் மேன்மேலும் படிப்படியாக ஏறி மனிதநிலை பெற்றிருப்பதை நோக்கும்போது உயிர்களை மேன்மைப்படுத்த வேண்டும் என்பதே இயற்கையின் உட்கருத்தென்பது தெளிவாகிற தென்று சொல்லுகிறார்கள். ஜந்துக்கள் செய்யும் போராட்டங்களும், அவைபடும் துன்பங்களும் அவற்றின் உயர்வுக்ாகவே ஏற்படுத்தப் படுகின்றன என்பதையும் அங்கீகாரம் செய்து கொள்கிறார்கள். இங்ஙனம் நம்மை உயர்வுறச் செய்ய வேண்டும் என்ற நோக்கமுடைய இயற்கைக்கு நாமும் அறிவுத் துணிவினாலே உதவி புரிவோமானால், அவ்வுயர்வு விரைவிலே கைகூடும்.

வீணாக அஞ்சுவதிலே பயனில்லை. இவ்வுலகம் நம்மிடம் கருணையுடையது என்பதை நாஸ்திகரும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஒப்புக்கொண்டால் அவர்களுக்கு நல்லது.

## தெய்வ பக்தியுடையோர்

இனி, தெய்வ பக்தி யிருப்பதாக வாயினாலே சொல்லிக் கொண்டு, வெள்ளிக்கிழமை தோறும் கோயிலுக்கு அபிஷேகம் பண்ணி வைப்பவர்களிலேயும், பெரும்பான்மையோர் உண்மையான பக்தி கொண்டவரில்லை. தெய்வபக்தி

உண்மையா பொய்யா என்பதை அறிந்துகொள்ள ஒரு சுலபமான வழியிருக்கிறது. தீராத தைரியம் இருக்கிறதா இல்லையா என்பதைப் பார்க்க வேண்டும். எதற்கும் அஞ்சாத தைரியமே உண்மையான தெய்வ பக்திக்கு லக்ஷணம். அஃதில்லாத பக்தி தேங்காய்க்கும் சர்க்கரைப் பொங்கலுக்கும் வீண் செலவு.

## தெய்வம் உண்டா?

தெய்வம் உண்டென்று நீ நம்புகிறாயா? உண்டானால் அது சர்வ சக்தியுடையது. அது என்னைப் படைத்தது. நானாக என்னை உண்டாக்கிக் கொள்ளவில்லை அது என்னைக் காக்கின்றது. எனது செய்கையாலே நான் உயிர் பிறக்க வில்லை. அதையே சரணடைவேன். இனி எதற்கும் பய மில்லை. அதை நான் பரிபூர்ணமாகச் சரணடைந்தால் அதன் சக்திகளெல்லாம் என்னிடத்திலே தோன்றும் 'மேருவைச் சார்ந்த காக்கையும் பொன்னிறமடையும். அதனால் அமரத்தன்மை பெறுவேன். இவ்விதமாக ஒருவன் மனத்தை உறுதி செய்துகொண்ட பிறகு, அவ்வுறுதிக்கு இணங்கும்படி தன் செய்கைகளை யெல்லாம் மாற்றிக் கொள்ள வேண்டும்.

## அடிப்படை

முதலாவது, நோய் தீர்த்துக்கொள்ள வேண்டும். நோயுள்ள உடம்பு பயனில்லை. நோயை ஒருவன் தனது மனோ பலத்தாலே நீக்கிவிடலாம். நல்ல காற்று, நல்ல நீர் ஒளி, வெயில், இவற்றிலே உடம்பு பழகவேண்டும். நாள் தோறும் ஏதேனும் ஓர் காரியத்திலே உடல் வெயர்க்கும்படி உழைக்க வேண்டும். இது புதிய உயிர் கட்டுவதற்கு அடிப் படை.

## உணவு

இரண்டாவது, நல்ல உணவு தேடி உண்ண வேண்டும். சுத்தமாகவும் ருசியாகவும் வயிறு நிறைய உணவு கொள்ள வேண்டும். "மிகினும் குறையினும் நோய் செய்யும்." நமது தேசத்து ஜனங்களுக்கு உணவைக் குறைக்கும்படி உபதேசஞ் செய்தல் அவசியமில்லை. உணவு மிகுதியால் நோய்ப்படும் கூட்டத்தார் நமது தேசத்திலில்லை. உணவுக் குறைதான் இங்கே யிருக்கும் ஸங்கடம். ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் என்ற ஆங்கில சாஸ்திரி கல்வியைப் பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறார். அதிலே குழந்தைகளுக்கு ஊண் மிகுதியால் உண்டாகும் நோய்களைக் காட்டிலும் ஊண்குறைவால் உண்டாகும் நோய்களே மிகவும் கொடியன என்று சொல்லுகிறார் ஊண்மிகுதிக்கு இயற்கையிலே மாற்றுண்டு. ஊண் குறைவுக்கு மரணந்தான் மாற்று. "உண்டவன் உரஞ் செய்வான்." பரிசுத்தமான உணவுகளை நிறைய உண்ணு நல் வேண்டும் இனிய பழங்கள் நாள்தோறும் உண்ணத்தக்கன உணவுக்குப் பணம் எந்த உபாயத்தாலேனும் தேடிக் கொள்ள வேண்டும். தேகத்திலே உழைப்பும் மனத்திலே தைரியமும் இருந்தால் பணந்தேடுவது கஷ்டமில்லை. சோம்பேறியாக ஒருவன் நிறையப் பணத்தை குவித்து வைத்துக்கொண்டு அக்கம்பக்கத்து ஜனங்கள் பட்டினி கிடந்து சாவதைப் பார்த்துக் கொண்டிருப்பது மிகவும் கொடிய பாவம்.

## செல்வர் கடமை

நமது நாட்டுச் செல்வர்கள் இவ்விஷயத்தைக் கவனிக்கவேண்டும். உன் சொத்தை எல்லோருக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, நீ ஏழையாக வேண்டுமென்று நான் சொல்லவில்லை. கைத்தொழில்களும் வியாபாரங் களும் ஏற்படுத்தி அக்கம் பக்கத்தாரிடம் சரியானபடி

வேலை வாங்கிக்கொண்டு சரியானபடி கூலி கொடு உனக்கும் நல்ல லாபம் கிடைக்கும். கூலி குறையக் கொடுக்கும் முதலாளி லக்ஷ்மிதேவியைக் காலால் உதைக்கிறான். அவன் மகன் தரித்திரத்திலும் நோயிலும் வருந்துவான். ஸகல ஜனங்களுக்கும் வயிறு நிறைய உணவு கிடைக்காத ஊரில் வாழும் செல்வர்களெல்லாம் திருடர். அங்கே குருக்களெல்லாம் பொய்யர். பண்டிதரெல்லாம் மூடர். மேன்மை நிலைபெற வேண்டுமானால் கைத்தொழில்கள் பெருகும்படி செய்ய வேண்டும். சாத்தியமில்லையென்று சொல்லி ஏங்குவதிலே பயனில்லை. எப்படியேனும், எப்படியேனும், எப்படியேனும் செல்வத்தை வளர்க்க வேண்டும்.

## 31. வருங்காலம்

*11 ஜூலை 1916*

[குறிப்பு : பாரதியாருக்குத்தான் எத்தனை ஆசை! கிணற்றுத் தவளைகளைப்போல் வாழாமல், வெளிநாடுகள் பலவற்றிற்கும் செல்லவேண்டும். உயர்ந்த கல்வி கற்று உலகமே வியக்கும்படியான யோசனைகளைச் சொல்ல வேண்டும். கைத்தொழில் ஆயிரம் ஆயிரமாகப் பெருகவேண்டும். கப்பலேறிப் போங்கள், புறப்படுங்கள், புறப்படுங்கள் என்று தூண்டுகிறார் கவிஞர்.

இன்று நாம் என்ன பார்க்கிறோம். பலர் வெளிநாடுகளுக்குச் செல்கிறார்கள். மெச்சிப் புகழும்படி தேர்ச்சி பெறுகிறார்கள். ஆனால்... ஆனால் அந்த நாட்டிலே தங்கி விடுகிறார்கள்,

வசதிகள் இல்லை. கலப்படமற்ற உணவுப் பொருள் கிடைக்காது. குடிநீர்கூட இந்த நாட்டில் நல்ல வகையில் கிடைப்பது அருமை. மெய்தான்.

இவற்றையெல்லாம் போக்குவதற்காகத் தானே முதலில் எண்ணி வெளிநாடு சென்றீர்கள்? தாய்நாட்டின்மீது அத்தனை பக்தியில்லையா? உங்கள் சுகம், உங்கள் இன்பம்—இவைதான் பெரிதாக உள்ளனவா?

இப்படிக் கேட்கும் நிலையில் நாம் இருக்கிறோம். இந்த அவல நிலையை மாற்ற வழியில்லையா? இதற்கொரு மருந்தில்லையா? நாட்டுத் தலைவர்கள் பார்த்துக்கொண்டு வாளா இருக்கிறார்கள். இன்று பாரதியார் உயிரோடிருந்தால் அவர் நெஞ்சம் என்ன பாடுபடுமோ!]

உலகம் எவ்வாறு தீவிரமாக மாறிக்கொண்டு வருகிற தென்பதை தமிழ்நாட்டார் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். ஒவ்வொருவரும் சிற்சில விவகாரங்களில் மனத்தைப் பதிய வைத்துக்கொண்டு வெளியுலகத்தின் மாறுதல்களிலே புத்தி செலுத்தாமல், அற்ப விருப்பங்களிலும், அற்பச் செய்கைகளிலும் நாளை யெல்லாம் கழியவிட்டுக் கிணற்றுத் தவளைகளைப்போல் வாழ்வதிலே பயனில்லை.

வர்த்தகஞ் செய்வோர் கோடிக்கணக்கான பணப் பழக்கம் ஏற்படும்படி பெரிய வர்த்தகங்கள் செய்ய வழி தேடவேண்டும். படிப்பவர் அபாரமான சாஸ்திரங்களையும் பல தேசத்துக் கல்விகளையும் கற்றுத்தர வேண்டும். ராஜ்ய விவகாரங்களில் புத்தி செலுத்துவோர் உலக சரித்திரத்தை நன்றாகத் தெரிந்துகொண்டு, மற்ற ராஜ தந்திரிகளும் மந்திரிகளும் கண்டு வியக்கும்படியான பெரிய பெரிய

யோசனைகள் செய்து நிறைவேற்றிப் புகழ்பெற வேண்டும் கைத் தொழில்களின் விஷயத்திலே நாம் இப்போது காட்டி வரும் சோர்வும் அசிரத்தையும் மிகவும் அருவருப்புக்கு இடந் தருகின்றன.

திருஷ்டாந்தமாக, நேர்த்தியான சித்திரங்களும் வர்ணங்களும் சேர்த்துப் பட்டிலும் பஞ்சிலும் அழகான ஆடைகள் செய்யவல்ல தொழிலாளிகள் நமது நாட்டில் இருக்கிறார்கள். இவர்களுக்குப் படிப்பில்லை; வெளியுலக நிலை தெரியாது. கையிலே முதற் பணமுமில்லை. நம்முள்ளே கல்வியும் செல்வமும் உடையோர் கூடி ஆராய்ச்சிகள் செய்து, வெளிநாடுகளில் ஆவலுடன் வாங்கக்கூடிய மாதிரிகள் எவை என்பதைக் கண்டுபிடித்து, அவற்றை நமது தொழிலாளிகளைக் கொண்டு செய்வித்தால் மிகுந்த லாபமுண்டாகும்.

இரும்புத்தொழில் உலகத்திலே வலிமையும் செல்வமுங் கொடுப்பது. எல்லாவிதமான கைத்தொழில்களும் தற்காலத்தில் இரும்பு யந்திரங்களாலே செய்யப்படுகின்றன. ஆதலால், நமது தேசத்துக் கொல்லருக்கு நாம் பல விதங்களிலே அறிவுவிருத்தியும் ஜீவன ஸௌகர்யங்களும் ஏற்பாடு செய்துகொடுத்து இடத்துக்கிடம் இயன்றவரை இரும்புத் தொழில்களை வளர்க்க வேண்டும்.

இனி, வர்ணப்படம், தையல் வேலை...மைத் தொழில் முதலிய சித்திர வேலைகளில் நமது ஜனங்களின் அறிவு மிகவும் சிறந்தது. கொஞ்சம் சிரமப்பட்டால், இந்தத் தொழில்களை மறுபடி உயர்ந்த நிலைமைக்குக் கொண்டு வந்துவிடலாம். சிறிது காலத்துக்கு முன்பு சீனத்திலிருந்தும் ஜப்பானிலிருந்தும் பல சித்திர வேலைகளைக் கொண்டுபோய் அமெரிக்காவில் காட்டியபோது, அங்கே அவற்றிற்கு மிகுந்த புகழ்ச்சியும் பிரியமும் ஏற்பட்டதாகத் தெரிகிறது.

இதை நாமேன் செய்யக்கூடாது?

வெளி நாட்டுக்குக் கப்பலேறிப் போங்கள், புறப் படுங்கள், புறப்படுங்கள். தொழிலாளிகளே, வியாபாரி களே, வித்வான்களே, புத்திமான்களே, எப்படியேனும் யாத்திரைச் செலவுக்குப் பணம் தயார் செய்துகொண்டு அன்னிய தேசங்களைப் பார்த்துவிட்டு வாருங்கள். நமது தொழில்களுக்கும், கலைகளுக்கும், யோசனைகளுக்கும் வெளி நாடுகளில் ஏராளமான உதவி கிடைக்கும். சந்தேகப்பட வேண்டாம்.

பரோடாவிலிருந்து இநாயத்கான் என்ற சங்கீத வித்வான் சில வருஷங்களுக்கு முன்பு தென்ஜில்லாக்களில் யாத்திரை செய்துவந்தது நம்மிலே சிலருக்கு ஞாபகமிருக் கலாம். இங்கே அவர் சாதாரணமாக இருந்தார். பின்னிட்டு அவர் பல தேசங்களிலே சஞ்சாரம் செய்து, பிரான்ஸ் தேசத்திலேபோய் நல்ல கீர்த்தியடைந்திருக்கிறார். அங்கே பல பெரிய வித்வான்களும் பிரபுக்களும் அவருடைய தொழிலை அற்புதத்திலும் அற்புதம் என்று கொண்டாடு கிறார்கள். சங்கீத ஞானமுடைய தமிழ்ப் பிள்ளைகள், முதலாவது கொஞ்சம் இங்கிலீஷ் கற்றுக்கொண்டு பிறகு ஐரோப்பிய சங்கீதத்தின் மூலாதாரங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும். இது மிகவும் சுலபமான காரியம். தமிழருடைய அறிவுக்கு எந்தவித்தையும் சுலபம். இந்தத் தேர்ச்சி கொஞ்சமிருந்தால், பிறகு நமது சங்கீதத்தை ஐரோப்பியர் அனுபவிக்கும்படி செய்தல் எளிதாகும். அப்பால், ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும்போய் நமது சங்கீதத்தின் உயர்வை அவர்களுக்குக் காட்டினால் மிகுந்த கீர்த்தியும் செல்வமும் பெறலாம்.

எவ்விதமான யோஜனை, எவ்விதமான தொழில், எவ் விதமான ஆசை, எதையும் கொண்டு பிறதேசங்களுக்குப்

போக வேண்டும். ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கு யாத்திரை செய்யப் போதுமான திரவியமில்லாதவர்கள் ஜப்பானுக்குப் போகலாம். வெளியுலகம் நம்மை எதி பார்த்துக் கொண்டிருக்கிறது. நமது வரவுக்குக் காத்திரு கிறது. நமது மேன்மைக்கு வசப்பட ஆவல் கொண்டிரு கிறது. வெளியுலகத்தில் நாம் சென்று மேம்பாடு பெற லொழிய, இங்கே நமக்கு மேன்மை பிறக்க வழியில்லை ஆதலால், தமிழ்ப் பிள்ளைகளே, வெளி நாடுகளுக்குப்போ உங்களுடைய அறிவுச் சிறப்பினாலும், மன வுறுதியினாலும் பலவிதமான உயர்வுகள் பெற்றுப் புகழுடனும், செல்வ துடனும், வீர்யத்துடனும், ஒளியுடனும் திரும்பிவாருங்கள் உங்களுக்கு மஹாசக்தி துணை செய்க.

## 32. மாலை

*15 செப்டம்பர் 1916*

[குறிப்பு: ஒரு காலத்திலே பல துறைகளில் நாம் சிறந்திருக்கலாம். அதையே எண்ணிக்கொண்டு இன்று அத்துறைகளில் மேலோங்காது நிற்பது பெருந் தவறு. பழைய சிறப்புக்கள் நம்மால் இன்றும் முடியும் என்பதைக் காட்டுவதற்குச் சான்றாக இருக்கலாமே ஒழிய, அதையே எண்ணி மகிழ்ந்து திருப்தியடைவது பிழை. எந்த சாஸ் திரமும் ஓரிடத்தில் வந்து நின்று விடுவதில்லை. என்று நிற்கிறோமோ அன்றே வீழ்ச்சி தொடங்கு கிறது. ஆகவே கலைக்கு முடிவில்லை. இது விஞ்ஞானத்திற்கும் பொருந்தும்; அழகுக் கலைகள் முதலியவற்றுக்கும் பொருந்தும். மொழி வளர்ச்சிக்கும் பொருந்தும்.

சங்கத் தமிழை எண்ணி வியந்துகொண்டே அதனின்றும் விலகாதவர்கள் இன்றும் இருக்கிறார்கள். அதை மறந்துவிடக் கூடாது. அது நமக்குப் புதிய முயற்சிக்கு ஊக்கம் தருவதாக அமைய வேண்டும்.

ஹிந்துக்களும் இஸ்லாமியர்களும் ஒருவரையொருவர் நன்கு அறிந்துகொள்ளச் சுருக்கமாகப் பாரதி ஒரு வழி காண்பிக்கிறார். அதற்காகவே இந்த மாலை ஆயிரங் கோடி பெறும். அது போலவே கிறிஸ்தவம், பௌத்தம் முதலிய மற்ற மதக்கலப்பும் வேண்டும். காந்தியடிகள் கூறுகிறார்: "எல்லாச் சாளரங்களையும் திறந்து வைப்போம். பல திசைகளிலிருந்தும் ஞானக் காற்று உள்ளே புகவிடுவோம் .பாரதப் பண்பாடு மட்டும் அசையாமல் இருந்து அவற்றை ஏற்றுக் கொள்ளட்டும்."]'

நமக்கு முடியாத காரியத்தைக் கைவிடலகாது. ந்மைக் காட்டிலும் திறமையுள்ள ஒருவன் கையிலே கொடுத்து, அவன் கீழே சிற்றாளாயிருந்து தொழில் பழகிக் கொண்டு, பிறகு நாமாகச் செய்யவேண்டும். இதை நாட்டுக்கோட்டைச் செட்டிகளும் கவனிக்கலாம்; காங்கிரஸ் சபையாரும் கவனிக்கலாம்.

ஒரு தரம் ஒரு வழக்கம் ஏற்பட்டுப் போனால் பிறகு அதை மாற்ற முடியாது. ஆதலால் புதிய வழக்கத்தைத் தொடங்குவோர் பின் வரக்கூடிய பலாபலன்களைத் யோசனை செய்தபிறகு தொடங்க வேண்டும்.

இது அநேகமாக எல்லா மனிதருக்கும் நினைப்பூட்ட வேண்டிய விஷயம். மாறுதல் இயற்கை. நல்லபடியாக மாற்றிக்கொண்டு போதல் புத்திமான்களுக்கு லக்ஷணம்.

மஹம்மதிய புஸ்தகசாலைகள், வாசக சாலைகள், கல்விச் சங்கங்கள் முதலியவற்றிலே ஹிந்து பண்டிதர்களும், ஹிந்துக்களின் கல்விக்கூடங்களிலே முஹம்மதிய வித்வான்களும் வந்து உபந்யாஸங்கள் செய்யும் காட்சி சில நாளாக நமது தேசத்தில் அதிகப்பட்டு வருகிறது. நமது ஜனங்களுக்குக் கொஞ்சம் கொஞ்சம் கண் திறக்கிறது. எல்லா வித்தைகளும் கலந்தால்தான், தேசத்தினுடைய ஞானம் பரிமளிக்கும். "ஒரு குழம்புக்குள்ளே இரண்டு "தான்" போட்டாளாம்; 'தான் தெரியாதா, குழம்புத்தான்; ஒன்று கத்திரிக்காய், ஒன்று உருளைக்கிழங்கு! இதிலே கத்திரிக்காய் உருளைக் கிழங்கைத் தின்றுவிட்டதாம்" என்றொரு பச்சைக் குழந்தைக் கதையுண்டு. கலந்தால் பொது இன்பம். ஒன்றை ஒன்று கடித்தால் இரண்டுக்கும் நாசம்.

முஹம்மதிய சாஸ்திரங்களைக் கற்றுகொண்டால் ஹிந்துக்களுக்கு அறிவு விசாலப்படும்.

*     *     *

ஒரு விரதமெடுத்தால் என்ன வந்தாலும் அதை கலைக்கக்கூடாது. ஆரம்பத்தில் கலைந்து கலைந்துதான் போகும். திரும்பத் திரும்ப நேராக்கிக்கொள்ள வேண்டும். நமது தேசத்திலே (ஸயின்ஸ்) சாஸ்திரப் படிப்பு வளரும்படி செய்யவேண்டும் என்று சில பண்டிதர்கள் அபேக்ஷிக்கிறார்கள். இதற்கு மற்ற ஜனங்களிடமிருந்து தக்க உபகாரம் கிடைக்கவில்லை. இருந்தாலும் இந்த நோக்கத்தை மறந்து விடலாகாது. ஊதுகிறபோது ஊதினால் விடிகிற போது விடியும். சாஸ்திரப் படிப்பு முக்கியம். அதில் தான் நன்மையெல்லாம் உண்டாகிறது. ஸயின்ஸ் மனித ஜாதியை உயர்த்திவிடும். அது இஹத்துக்கு மாத்திரமேயன்றி பரத்துக்கும் ஸாதனம் ஆகும். காசிக்கு

தெற்கே காட்டுகிற மனிதன் கைலாயத்திற்கு நேர்வழி காட்டுவானோ?

*　　　*　　　*

நமது பூர்விகர் ஸயின்ஸ் தேர்ச்சியிலே நிகரில்லாதிருந்தார்கள். அந்தக் காலத்து லௌகீக சாஸ்திரம் நமக்குத் தெரிந்தமாதிரி வேறு யாருக்குந் தெரியாது. இந்தக் காலத்து ஸங்கதிதான் நமக்குக் கொஞ்சம் இழுப்பு.

## 33. தொழில்

*5 மார்ச் 1917*

*[குறிப்பு : "யாதானும் தொழில் புரிவோம்; யாதும் அவள் தொழிலாம்" என்று பாடிய கவிஞர், "தொழில் செய், தொழில் செய்" என்று வற்புறுத்திக் கூறுவதில் சலிப்படைவதே இல்லை.*

*இக் கட்டுரையிலே 'தொழிலின் உயர்வைப் பற்றிப் பல புகழ்பெற்ற உலக அறிஞர்கள் கூறியுள்ளவற்றை மொழிபெயர்த்துத் தருவதோடு அவற்றை விளக்கியும் எழுதியுள்ளார். எவ்வகையிலேனும் சோம்பலை உதறித் தள்ளிவிட்டுப் பல தொழில்கள் செய்து நாட்டை உயர்த்த வேண்டும் என்பது அவருடைய பேராசை.*

*உலகத்திலே தொழிலிலே முன்னேற்றங் கண்ட ஜப்பானிய மக்களின் ஆர்வத்தையும், கடமை உணர்ச்சியையும், நாடு முன்னணியில் நிற்கவேண்டும் என்ற துடிப்பையும் நாம் கொண்டால், எவ்வளவோ நன்மையுண்டு. அந் நாட்டிலே*

ஊதியங் கருதிப் போராடும் தொழிலாளிகளும், கோஷமிட்டுத் தமது எண்ணத்தை வெளிப் படுத்திவிட்டுத் தொழிற்சாலைக்குள்ளே சென்று கடமை உணர்ச்சியோடு தொழில் செய்வார் களாம். இரண்டாம் உலக யுத்தத்தில் மிகவும் சேதமடைந்த ஜப்பான், இன்று தொழிலில் முதலிடத்தைப் பெற முனைந்திருப்பதற்கு மக்களின் உணர்ச்சியே காரணமாகும் என்பதில் ஐயமுண்டோ?]

I

(வசனத் திரட்டு—"ஆர்ய பத்திரிகை)

1. மனுதர்ம சாஸ்திரம் சொல்லுகிறது:—தொழி லாளியின் கை தொழில் செய்யும்போது பரிசுத்த மாகிறது.

2. சீ-பிங் என்ற சீன ஞானி:—தர்மிஷ்டன் எப்போதும் முயற்சியோடிருப்பான்.

3. (நபி) ஸுலேமான் என்ற யூத ஞானி:—சோம்பேறி யின் மன விருப்பம் அவனையே கொல்லுகிறது

4. தோல்ஸ்தோய் என்ற ருஷிய ஞானி:—தொழில் எத்தனை அசுசியாக இருந்தாலும், அதைச் செய் வதில் அவமானமில்லை. சோம்பலொன்றுதான் அவமானம்.

. உத்தம ஸுக்தம் என்ற பௌத்த நூல் சொல்லு கிறது:—சோம்பல் ஒரு குற்றம். தொழிலின்றி வாழ்தல் ஒரு மலம்.

6. தோரோ என்ற அமெரிக்க ஆசிரியர்:—உடம்பை சோம்பலுக்கும் சொகுசுக்கும் இரையாக்கி வைத்திருப்பவனை ஞானியாகக் கொள்ளலாகாது. ஆத்மாவுக்கு உடம்பே முதலாவது சீடன்.

7. கார்லைல் என்ற ஆங்கிலேய ஆசிரியர்:—சந்தேகம், விசனம், மனச்சோர்வு, கோபம், ஏக்கம் இந்தப் பிசாசுகளெல்லாம் மனிதனை அடிக்கும் பொருட்டு பதுங்கி நிற்கின்றன. அவன் சோம்பலுக்கிடங் கொடுக்கும்போது இவையெல்லாம் அவனை வந்து தாக்குகின்றன. தீவிரமாக உடம்பை உழைப்பதே இந்தப் பிசாசுகள் அடிக்காமல் தன்னைக் காத்துக் கொள்ளுவதற்கு நிச்சயமான வழி. தொழிலைக் கைக்கொண்டால், பிறகு எந்தப் பிசாசும் பக்கத்தில் நெருங்காது. மிஞ்சி வந்தால், தூரத்திலிருந்து உறுமும். அவ்வளவுதான்.

8. மோந்தாஞ் என்ற ப்ரான்ஸ் தேசத்துப் பண்டிதர்:—சோம்பலை நரக வேதனைகளில் ஒன்றாகக் கணக்கிட வேண்டும். அதைச் சிலர் சொர்க்க இன்பங்களில் ஒன்றாக நினைக்கிறார்கள்.

9. நபி ஸுலேமான்:—சோம்பேறியே எறும்பினிடம் போ. அதன் நெறிகளைப் பார். உனக்குப் புத்தி வரும்.

## II

## விளக்கம்—காளிதாஸன்

மேலே மொழிபெயர்த்திருக்கிற வசனங்களில் தொழிலில்லாதவருக்கு ஆத்ம ஞானமில்லை யென்று தோரோ (6) சொல்லுகிறார். ஆத்மாவுக்கு முதலாவது

சிஷ்யன் சரீரமென்பது அவர் கொள்கை. ஆத்ம ஞானி சோம்பேறியாக இருக்கமாட்டானென்கிற இவரது கொள்கை பகவத்கீதையின் கருத்துக்கு இணங்கியதே யாகும். தொழிலின்றி இருப்பவனுக்கு விடுதலையில்லை, ஞானமில்லை, பக்தியில்லை. அவனுக்குச் சோறு கிடையாது. தண்டச்சோறு தின்று தொழில் செய்யாதிருப்பவன் கொழுத்து நோய்கொண்டு சாவான். இந்த விஷயங்கள் பகவத் கீதையில் மிகத்தெளிவாகச் சொல்லப்படுகின்றன.

கார்லைல் (7) என்ற ஆங்கிலேய ஆசிரியர், தொழிலின்றி இருப்பவனைச் சந்தேகம் முதலிய பிசாசுகள் வந்து தாக்கு மென்று சொல்லிய வார்த்தை பொது அநுபவத்திலே காணத்தக்கது. சந்தேகம், பயம் முதலிய பிசாசுகள் வந்து தாக்காமலிருக்கும் பொருட்டாகவும், அங்ஙனம் தாக்கும் போது அவற்றை மடிக்கும் பொருட்டாகவும், தொழி லென்ற மருந்தைக் கடவுள் கொடுத்திருக்கிறார்.

பூஜை, கல்வி, போதனை முதலியனவும் சரீர உழைப்புப் போலவே கவலையை நீக்கி உடம்பைப் பேணும். உண்மை யாகச் செய்யப்படும் பூஜையும், உபதேசமும் எல்லாத் தொழில்களைக் காட்டிலும் சிறந்தன. பொய்ப் பூஜையும், காசைப் பெரிதாக நினைத்துச் செய்யும் ஞானோபதேசமும் மிகவும் இழிந்த தொழில்களாகும். பல இடங்களில் வியாபாரிக்குள்ள மதிப்புப் பூசாரிக்கும் குருக்களுக்கும் இல்லாதிருக்கக் காண்கிறோம். இவர்களுக்கு மதிப்புக் குறை வுண்டாகும் காரணம் உண்மைக் குறைவுதவிர வேறொன்று மில்லை. அறிவை நல்ல வழிகளில் உழைப்பவனுடைய உடம்பு முயற்சியில்லாமல் சோம்பிப் படுத்திருக்க நியாய மில்லை. சோம்பேறியின் விருப்பங்கள் கவலைகளாக மாறு கின்றன. கையினால் உழைக்காமல் மனத்தால் விரும்புவோன் தன்னைத்தானே தின்றுகொள்கிறான்

சாம்பேறியின் மனத்தைக் கவலைகள் சூறையாடுவது போல், அவனுடம்பை வியாதிகள் சூறையாடுகின்றன. முயற்சியினாலே செல்வம் வருமென்றும் முயற்சியில்லா விட்டால் வறுமை வருமென்றும் திருவள்ளுவர் சொல்லு கிறார். முயற்சியில்லாதவருக்கு நோய் வரும், பந்தங்கள் வரும்; அவர்கள் மோந்தாஞ் ஆசிரியர் (8) சொல்வதுபோல் இவ்வுலகத்திலேயே நரக வாதனைப்படுவார்கள். ஆகையால் ஹிந்துக்களாகிய நாம் முயற்சியைக் கைவிடாமல் நடத்த வேண்டும். முயற்சி உண்டானால் உடம்பிலே வலிமையுண்டு, உள்ளத்திலே மகிழ்ச்சியுண்டு, கல்வியுண்டு, செல்வமுண்டு, நீண்ட வயதும் புகழும் இன்பங்களுமுண்டு. முயற்சியிருந் தால் பயமில்லை, முயற்சியுண்டானால் வெற்றியுண்டு. முயற்சி உடையவனுக்கு விடுதலை கைகூடும்.

## 34. பொழுது போக்கு

*[குறிப்பு :—இத் தலைப்பிட்டுப் பாரதியார் சுதேசமித்திரனுக்கு அனுப்பிய கட்டுரை 28 மார்ச்சு 1917-இல் வெளியாகியுள்ளது. அதில் வால் நட்சத்திரம் தோன்றுவதால் பூமி தூளாகி விடும் என்று அன்று கொண்டிருந்த நம்பிக்கை யைத் தகர்த்தெறிகின்றார் கவிஞர். சூரிய கிரஹணம் ஏற்படுவதால் என்னென்னவோ இன்னல்கள் விளையும் என்று இக்காலத்தில்கூட மககள் நம்புகிறார்கள் என்பதை, 1980 பிப்ரவரி 16 தேதியன்று பார்த்தோம்.*

*'சாதாரண வருஷத்துத் தூமகேது' என்று பாரதியார் ஒரு கவிதையே இயற்றியுள்ளார்,*

ஆனால் அது 1910-இல் நிகழ்ந்தது. இங்கு குறிப்பிடப்படுவது 1917-இல் ஏற்பட்டது. சாதாரண ஆண்டில் தோன்றியது 75 ஆண்டுகளுக்கு ஒரு முறை வானவெளியில் தோன்றுவது. அதற்கு ஹால் தூமகேது என்று பெயர்.

ஏதாவது ஒரு நம்பிக்கை அல்லது பழக்கம் ஆழமாகப் பதிந்துவிட்டால், அது தவறு என்று தெரிந்தபோதும் மாற்றுவது எவ்வளவு கடினம் என்பதை இன்றைய விஞ்ஞான உலகத்திலும் காண்கிறோம்.]

ஸந்தோஷராயர் : ஏப்ரல் மாதம் 22-ந் தேதி ஒரு வால் நக்ஷத்திரம் எரி நக்ஷத்திரம் ஒன்றைத் தன் வாயில் கவ்விக்கொண்டு வந்து பூமியின்மேல் மோதப்போவதாகவும் அதனால் இந்த பூமண்டலம் தூள் தூளாக நொறுங்கி விடப் போவதாகவும் சொல்லுகிறார்களே? அது வாஸ்தவமாக இருக்குமா?

காளிதாஸன் : பொய்க் கதை

ஸந் : உமக்கெப்படித் தெரியும்? அமெரிக்கா தேசத்தில் யாரோ ஒரு பெரிய வான சாஸ்திரப் பண்டிதர் சொல்லியிருக்கிறாராமே? அது பொய்யென்று நீர் எப்படிக் கண்டீர்?

காளி : பொய்க் கதைதான். எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஏப்ரல் மாதம் 23—ம் தேதி நீர் என்னிடம் வந்து சேரும். அப்போது காரணங்கள் சொல்லுகிறேன்.

ஸந் : பூமி தூளாய்ப் போனபிறகு நான் உம்மிடம் வந்து கேட்பதெப்படி? நீர் விடை சொல்வதெப்படி?

காளி : இந்த பூமியில் இன்னும் நாமே நெடு நாளி லிருந்து பலவித நியாயங்கள் நடந்து நிறைவேறுவதைப் பார்க்கப் போகிறோம். பூமியில் நல்ல யுகம் தோன்றப் போகிறது. மனிதஜாதி முழுமைக்கும் விடுதலையுண்டாகப் போகிறது. நீர் சொல்லிய ருஷிய ராஜ்யப் புரட்சியானது இனி வரப்போகிற நற்காலத்தின் முன்னடையாளங்களில் ஒன்று. பூமி தூளாகாது. மனிதர் ஒருவருக்கொருவர் செய்யும் அநீதி தூளாகும்.

## 35. கடற்பாலத்தில் வர்ணாஸ்ரம சபை

7 ஏப்ரல் 1917

[குறிப்பு : ஏதோ இயல்பாகப் பேசுவது போலத் தொடங்கி, பாரதியார் தமக்குப் பிடித்த மான கொள்கைகளை நுழைத்து விடுவார் என்பதற்கு, இக் கட்டுரையும் ஓர் எடுத்துக் காட்டு. அன்பே பிரதானம் என்பதைச் சொல்லு வதில் அவர் சலிப்பதே இல்லை. கலியுகத்திலே ஒரு குட்டிக் கிருதயுகம் தோன்றும் என்று அவர் நம்பினார். அப்படித் தோன்றுவதற்கு அன்பு அடிப்படையாக அமைய வேண்டும் என்பது அவர் கருத்து. தொழில் எதைச் செய்தாலும் அதைக் கொண்டு ஜாதி வேறுபாடுகள் இருக்கக் கூடாது; எல்லாத் தொழிலும் சமமான தகுதி யுடையவை என்று, கவிஞர் இக் கட்டுரையிலும் குறிப்பிடுகிறார்.

"செம்படவன் மகன் சாஸ்திரத் தேர்ச்சி பெற்று விட்டால் அவனுக்கு என் பெண்ணை

விவாகம் செய்து கொடுப்பேன்" என்று சேஷய்யங்காரைச் சொல்ல வைக்கிறார். என்ன உத்ஸாகம்! எத்தனை எதிர்பார்ப்பு!]

வஸந்த காலத்தில் ஒரு நாள் காலையில் இளவெயில் அடிக்கும் நேரத்தில் வேதபுரத்திலுள்ள கடற்பாலத்தின் கடைசியில், நடுக் கடலின்மீது, ஒரு செம்படவன் உட்கார்ந்து மீன்பிடித்துக் கொண்டிருந்தான். அங்கே நானும், எனது நண்பர் சக்ரவர்த்தி சேஷய்யங்காரும் சரீர சுகத்திற்காக நடைபழகப் போனோம். அங்கு புதிதாகச் செய்துவைக்கப் பட்டிருந்த ராஜாங்கத் தோணிகளின் நிழலிலே போய் சிறிதுநேரம் உட்கார்ந்து ஆயாஸம் தீர்த்துக் கொள்ளலாமென்று சேஷய்யங்கார் சொன்னார். அந்த நிழலிலேபோய் உட்கார்ந்தோம். என் கையில் சில வர்த்தமானப் பத்திரிகைகள் கொண்டு போயிருந்தேன். அவற்றை யெடுத்து வாசித்துக் கொண்டிருந்தேன். சேஷய்யங்காருக்குப் போது போகவில்லை. அவர் அந்த மீன் பிடிக்கும் செம்படவனிடத்திலே போய்ப் பேச்சுக் கொடுத்தார். அவனோ மீன் சரியாகக் கிடைக்க வில்லை யென்ற கோபத்திலிருந்தான். சிறிது நேரம் கழிந்தபிறகு சேஷய்யங்கார் என்னை நோக்கி, "வீட்டுக்குக் கிளம்பலாம்; புறப்படும்" என்றார்.

நான் சொன்னேன் :—

"ஸ்வாமி, நான் காலையில் காபி குடித்துவிட்டுத்தான் வீட்டிலிருந்து புறப்பட்டேன். எனக்கு இங்கே சிறிது நேரம் தனியே யிருப்பதில் பிரிய முண்டாகிறது. நீர் அவஸரமானால் வீட்டுக்குப்போம். நான் கொஞ்சம் இங்கே இருந்துவிட்டு வருகிறேன்" என்றேன்.

அப்போது சேஷய்யங்கார் புன்சிரிப்புடனே, "நான் ஆஹாரமில்லாமல் வெளியே புறப்படும் வழக்கம் எ

போதுமே கிடையாது. எனக்கும் பசியில்லை. ஆதலால், நானும் இங்கேயே உம்மோடு சிறிது நேரம் பொழுது போக்கத் தயாராக இருக்கிறேன். இந்த இடத்தில் ஒரு சபை கூடிப் பேசினால் மிகவும் நன்றாக இருக்கும். என்ன செய்யலாம்? அந்தச் செம்படவன் பேச வரமாட்டான். அவன் மீன் கிடைக்கவில்லையென்று என் மேலே கோபித்துக் கொள்ளுகிறான். நீரோ பத்திரிகையிலுள்ள அண்டப் புளுகுகளையெல்லாம், வேத வுண்மை போலே கருதி, மஹா சிரத்தையுடன், நுழைந்து நுழைந்து வாசித்துக் கொண்டிருக்கிறீர். விடுங்காணும்! பத்திரிகையை அப்பாலே போடும். காற்று மிகவும் ரஸமாக வீசுகிறது. எனக்கு இந்த இடத்தை விட்டுப் போக மனதாகவில்லை. ஏதாவது பேச்செடும்'' என்று சொன்னார்.

விதியே சேஷய்யங்கார் ரூபமாக வந்து நம்மைப் பேச்சுக்கிழுக்கிற தென்பதை நான் தெரிந்து கொண்டு, பின்வருமாறு சொல்லலானேன் :—

''ஸ்வாமீ, என்னால் வஞ்சனையில்லை. சபை போடுவோம். அதைப்பற்றி யாதொரு ஆக்ஷேபமுமில்லை. ஆனால் உபந்யாஸமெல்லாம் நீர் தான் செய்ய வேண்டும். நீர் உபந்யாஸி; நான்தான் சபைக் கூட்டம். நடத்தும்'' என்றேன்.

அதற்கு சேஷய்யங்கார் சொல்கிறார் :—

''நான் உபந்யாஸ கர்த்தா; நீர் அக்ராஸனாதிபதி; அந்தச் செம்படவன்தான் சபை'' என்றார்.

அப்போது, சற்று தூரத்திலேயிருந்த அந்தச் செம்படவன் சொல்லுகிறான் :—

''சாமிமாரே, நீங்கள் வந்தாலும் வந்தீர்கள். எனக்கு மூன்று மீன் கூட முழு மீனாகக் கிடைக்கவில்லை.''

சேஷய்யங்கார் இதைக் கேட்டவுடனே கால் ரூபாயை அவன் கையிலே கொண்டு போய்க்கொடுத்து, அவனை யழைத்து வந்து நாங்களிருந்த நிழலிலே உட்காரும்படி செய்தார். இவருடைய படாடோபத்தைக் கண்டு ஆரம்பத்திலே அவன் கொஞ்சம் பயந்தான். பிறகு அவர் சொன்னபடி கேட்டால் காசு கிடைக்குமென்று தெரிந்து கொண்டு, அவன் எங்கள் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான்.

சேஷய்யங்கார் உபந்யாஸிக்கலானார் :—

"நாலு ஜாதிதான் உண்டு. பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்ரர். படித்தவன் பிராமணன்; வீரன் க்ஷத்திரியன்; தந்திரசாலி வைசியன்; தொழிலாளி சூத்திரன். இது எந்த தேசத்திலும் உண்டு. எந்தக் காலத்திலும் உண்டு. இதை மாற்றவே முடியாது."

செம்படவன் :—"மெய்தான் சாமி; மெய்தான் சாமி" என்றான்.

சேஷய்யங்கார் — "இந்தச் செம்படவன் மகன் படித்து சாஸ்திரத் தேர்ச்சி யடைந்து பிரமஞானியாய் விட்டால், அவனுக்கு என் பெண்ணை விவாகம் செய்து கொடுப்பேன். அதில் தோஷமில்லை" என்றார்.

செம்படவன் நடுங்கிப் போனான். ஐயங்காருக்கு புத்தி ஸ்வாதீனமில்லை யென்று நினைக்கத் தொடங்கினான்.

சேஷய்யங்கார் மொழிகிறார்:— "ஆனால் குலத்தையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். குலத்தளவே யாகும் குணம் என்று பெரியோர் சொல்லியிருக்கிறார்கள். அம்பட்டனுடைய குழந்தை சிறு பிள்ளையாக இருக்கும் போதே ஒருவரும் சொல்லிக்கொடுக்காமல் தானாகவே சிரைக்கக் கற்றுக்கொள்ளுகிறது. கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்; ராஜா வீட்டுப் பிள்ளை இயற்கை

யாகவே சைன்யம் வகுத்து விளையாடிப் பழகுகிறது. தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும். ஆதலால் பிறவி ஒருவனுடைய குணத்தையும் தொழிலையும் நிர்ணயிக்கத் தான் செய்கிறது. ஆதலால் இப்போதுள்ள ஜாதிப் பிரிவை அதிகமாக மாற்றக்கூட வேண்டியதில்லை. 'எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும் அக்குடியிற் கற்றோரே மேல் வருக' என்று சொல்லி பிராமணப் பதவியிலே சேர்க்க வேண்டும். இதற்கிடையே திருஷ்டி தோஷம் புத்திசாலித் தனமில்லை. அதை உடனே நிறுத்திப் போடவேண்டும். 'தீண்டாத ஜாதி' என்கிற பேச்சே கூடாது. அது வெறும் பயித்தியம். நந்தன் சிலையை அறுபத்து மூன்று நாயன் மாருக்கு நடுவிலே வைத்து குருக்கள் மணியடித்துக் கும்பிடவில்லையா? ஜாதியாவது குலமாவது! இவை யெல்லாம் லௌகிகம். இதனாலே மனுஷ்ய ஸமத்வத்துக்குக் குறைவு நேரிடக்கூடாது. ராம்தாஸ், கபீர்தாஸ், அவர்கள் சொன்னதெல்லாம் பொய்யா?"

இவ்வாறு சேஷய்யங்கார் நெடுந்தூரம் சொன்னார். போகப் போக அவருடைய பிரசங்கத்தில் நான் கொஞ்சம் கவனக் குறைவாக இருக்கும்படி நேரிட்டது. ஏனென்றால் இவர் பேசிக்கொண்டிருக்கும் போதே எங்கள் பக்கத்தில் ஒரு கிழவன் வந்து நின்றான். அவனுக்கு சுமார் அறுபது வயதிருக்கும் போலே தோன்றிற்று. ஆனால் திடகாத்திர முடையவன். அவன் சேஷய்யங்காருடைய பிரசங்கத்தை மிகவும் ஜாக்கிரதையாகக் கேட்டுக்கொண்டு வந்தான். சேஷய்யங்கார் சொல்லும் வார்த்தைகளிலே ஒன்றிரண்டை கேட்டுப் புன்சிரிப்புச் சிரித்தான். ஓரிரண்டு வார்த்தைகள் அவன் முகத்திலே கோபக் குறி விளைவித்தன. நான் அவனைக் கையினால் சமிக்கை காட்டி என்னருகே வரும்படி சொன்னேன். ஸமீபத்தில் வந்தான். "நீ என்ன ஜாதி?"

என்று கேட்டேன். "பறையன்" என்றான். இதைக் கேட்ட வுடன் சக்ரவர்த்தி சேஷய்யங்கார் திரும்பிப் பார்த்தார்.

## II

சக்ரவர்த்தி ஷேய்யங்கார் கிழச் சாம்பானை உட்காரச் சொன்னார். அவன் உட்கார்ந்தான். "நான் சொல்லிய வார்த்தைகளை நீ மிகவும் கவனத்துடன் கேட்டுக் கொண் டிருந்தாயே, நீ யார்? உன் பெயர் என்ன?" என்று சேஷய்யங்கார் சொன்னார்.

அப்போது கிழச்சாம்பான் சொல்லுகிறான்:—

"சாமிகளே, நான் பஞ்சம ஜாதி. என் பெயர் லக்ஷ்மணன். பிராம்மணரே எங்களுக்கு குரு. முன்பொரு மாட்டுக் கொட்டகையில் எங்கள் தாயாகிய ஆதியை பகவன் என்ற பிராம்மணன் மனைவியாகச் செய்து கொண்டான். பிராம்மண ஜாதி எங்களுக்குத் தகப்பன் முறை. இக்காலத்தில் பலர் எங்களுக்கு உபகாரம் பண்ண வருகிறார்கள். எல்லா மனிதரும் சரிசமான மென்றும் மனிதருக்குள் எவ்விதமான பேதமும் கிடையாதென்றும் பலர் சொல்லுகிறார்கள். எல்லாம் வாய்ப் பேச்சாகத் தானிருக்கிறது. நடத்தையில் ஒன்றையும் காணவில்லை. ஹிந்து மதத்தில் எங்களுடைய நிலைமை தாழ்ந்திருக்கிற தென்றும், கிறிஸ்து மதத்தில் சேர்ந்தால் எங்களுடைய நிலைமை மேன்மைப்படுமென்றும் சொல்லிக் கிறிஸ்தவப் பாதிரிகள் எங்களிலே சிலரைக் கிறிஸ்து மதத்தில் சேர்த் தார்கள். அதில் யாதொரு பயனையும் காணவில்லை. நூற்றிலொருவனுக்குப் பத்துப் பதினைந்து ரூபாய் சம்பளத் தில் ஒரு வேலை கிடைக்கிறது. மற்றவர்களெல்லாரும் துரை மாரிடத்தில் சமையல் வேலை பண்ணுதல், பயிரிடுதல்,

குப்பை வாருதல் முதலிய பழைய தொழில்களைத்தான் செய்து வருகிறார்கள். எனக்கு முன்னோருடைய மதமே பெரிது. கிறிஸ்தவர்களுடன் எங்களுக்குக் கொடுக்கல், வாங்கல், சம்பந்தம், சாப்பாடு ஒன்றுமே கிடையாது. என்ன கஷ்டமிருந்தாலும் நாங்கள் ஹிந்து மதத்தை விடமாட்டோம். உங்களைப் போலே எல்லாப் பார்ப்பாரும் எங்களிடம் அன்பு பாராட்டினால், பிறகு எங்களுக்கு யாதொரு குறையுமில்லை. தொழில் ஏதாயிருந்தாலும் குற்றமில்லை. ஒரே தேசத்தில் பிறந்து, ஒரே மதத்தைச் சேர்ந்து, ஒரே கூட்டமாக இருக்கும் ஹிந்துக்கள் ஒருவருக் கொருவர் அன்போடிருக்க வேண்டாமா? எங்கள் ஜாதிக் காரருக்குச் சோறும் துணியும் நேரே கிடைத்து வருகிறதா என்பதைக்கூட மற்ற ஹிந்துக்கள் கவனியாமலிருப்பது நியாயமா? எந்தத் தொழில் செய்து பிழைத்தாலும் தெய்வ பக்தி இருந்தால் இஹத்தில் மேன்மையும் பரத்திலே மோக்ஷமும் உண்டு. திருவள்ளுவர் எங்கள் குலத்தில் வளர்ந்தார்.''

இங்ஙனம் அவன் பேசிக்கொண்டு போகையில் சக்கரவர்த்தி சேஷய்யங்கார் அவனை நோக்கி, ''உனக்கு வயதென்ன?'' என்று கேட்டார்.

''நீங்களே சொல்லுங்கள். எனக்கு வயதெவ்வளவிருக் கலாம்?'' என்று கிழச்சாம்பான் திருப்பிக் கேட்டான்.

''அறுபதிருக்கும்?'' என்றார் அய்யங்கார்.

''என்னைப் பார்த்தவர்களெல்லாம் ஐம்பதறுபது வயதென்று தான் மதிக்கிறார்கள். ஆனால் எனக்கு எண்பது பிராயமாய் விட்டது. இந்தப் பாலம் கட்டின போது எனக்குத் தெரியும். அந்தக் காலத்தில் நான் இருவது வயதுப் பிள்ளை. நானும் இதில் வேலை செய்தேன். நித்தம் மூன்றணாக் கூலி'' என்று கிழவன் சொன்னான்.

"இப்போது உனக்கு ஜீவனம் சுகமாக நடந்து வருகிறதா?" என்று அய்யங்கார் கேட்டார்.

"சுகந்தான் சாமி. இரண்டு பெண்ணும் ஒரு பிள்ளையும் கடவுள் கொடுத்திருக்கிறார். இரண்டு பெண்ணையும் சரியான இடத்தில் கட்டிக்கொடுத்து விட்டேன். மகன் பயிர்த்தொழில் செய்கிறான். நான் மாட்டு வண்டி வைத்திருக்கிறேன். கடலோரத்துக்குக் கிடங்குகளிலிருந்து சரக்கேற்றி வந்தால் வியாபாரிகள் கூலி கொடுப்பார்கள். அதில் எனக்குக் கூடியவரை சரியான வரும்படி கிடைத்து வருகிறது. இப்போது சண்டையினால் மணிலாக்கொட்டை ஏற்றுமதி குறைந்திருக்கிறது. அதனால் எனக்கு வரும்படி யில்லாமலிருக்கிறது. இருந்தாலும், கடவுள் கிருபையால் போஜனத்துக்குக் கஷ்டமில்லை" என்று கிழச்சாம்பான் சொன்னான்.

"இவ்வளவு படிப்பு நீ எங்கே படித்தாய்?" என்று நான் அந்தக் கிழச் சாம்பானிடம் கேட்டேன். அதற்குக் கிழச் சாம்பான் சொல்லுகிறான்:—

என்னுடைய பிதாவுக்கு வாத்தியார் வேலை. அவர் தமிழிலே மேலான படிப்புள்ளவர். நானும் திருக்குறள் முதலிய சாஸ்திரங்கள் படித்திருக்கிறேன். படிப்பிலே என்ன பயனுண்டு, சாமி? பெரியோர்களுடைய சேர்க்கையால் தெய்வபக்தி ஏற்பட்டது. அதையே ஊன்றுகோலாகக் கொண்டு பிழைத்து வருகிறேன்" என்றான்.

அப்போது சேஷய்யங்கார் அவனை நோக்கி:—

"இந்த தேசத்து ஜாதிக்கட்டு அநியாயமென்று உனக்குத் தோன்றவில்லையா? தெருவுக்குள் உங்களவர் வரக்கூடாதென்று மற்ற ஜாதிக்காரர் ஏற்பாடு செய்திருப்பது பற்றி உனக்கு வருத்த முண்டாகவில்லையா?

உன் மனம் அதை நினைத்து நினைத்துக் கொதிக்கவில்லையா''? என்று கேட்டார்.

அதற்குக் கிழச் சாம்பான்:—

"இல்லை, சாமீ; என் மனம் அதிலே கொதிப்படைய வில்லை. மனிதருடைய இஷ்டப்படி இந்த உலகம் நடப்ப தாக மூடர் நினைக்கிறார்கள். நீங்கள் சொல்லிய அநியாயம் என் கண்ணுக்குத் தெரியத்தான் செய்கிறது. அதிலே வருத்தமில்லை. விதிப்படி எல்லாம் நடக்கிறது. அநியாயம் உலக முழுதையும் சூழ்ந்திருக்கிறது. சீக்கிரம் அழிந்து போய்விடும். உலகத்தில் அநியாயம் குறைவுபடும்போது எங்கள் ஜாதிக்கும் நியாயம் கிடைக்கும். அதைப்பற்றி எனக்குக் கொஞ்சமேனும் பயமில்லை. எந்த அநியாயமும் உலகத்தில் நீடித்து நிற்காது. ராவணாதிகள் இப்போதிருக் கிறார்களா? அவர்கள் காலத்தில் என்ன அநியாயம் நடந்தது! பிராமணர்களுடைய யாகத்தை அழிக்க வில்லையா? மனிதர்களைப் பிடித்துப் பிடித்துத் தின்ன வில்லையா?......

கேட்டீர்களா சாமிமாரே? என் தகப்பனார் இறந்து போய் இப்போது நாற்பது வருஷமாகிறது. அவர் தொண்ணூற்றிரண்டு வயதிருந்தார். சாகும் வரையில் பேச்சு வார்த்தை தள்ளாடவில்லை. உறுதியாகவே யிருந் தார். அவர் செத்துப் போவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்னே ஒரு நாள் பாதி ராத்திரியில் என்னை எழுப்பிப் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டு பல செய்திகள் சொன்னார். அதில் ஒரு வார்த்தை இப்போது எனக்கு ஞாபகம் வருகிறது. கேட்டீர்களா, சாமிமாரே? என் தகப்பனார் சொன்னார்: 'அடே, லக்ஷ்மணா, நான் எப்போது செத்துப் போவேனோ தெரியாது. ஆனால் என்னுடைய குரு எனக்குச் சொல்லிவைத்த ஆச்சரியமொன்றை உனக்

குச் சொல்லிவிட்டுப் போகிறேன். கலியுகம் ஐயாயிரம் வருஷத்துக்குப் பிறகு ஒரு புதுயுகம் பிறக்கும். அதுதான் கலியுகத்துக்குள்ளே கிருதயுகம். அப்போது இந்த உலகமே மாறும். அநியாயங்களெல்லாம் நொறுங்கித் தவிடுபொடியாகி விடும். நாலு குலம் மறுபடியேற்படும். அந்த நாலு குலத்தாரும் வெவ்வேறு தொழில் செய்து பிழைத்தாலும், ஒருவருக்கொருவர் அநியாயம் செய்ய மாட்டார்கள்; துரோகம் செய்யமாட்டார்கள். அன்பே தெய்வமென்று தெரிந்து கொள்ளுவார்கள். அன்பிருந் தால் குழந்தையும் தாயும் ஸமானம்; ஏழையும் செல்வனும் ஸமானம்; படித்தவனும் படியாதவனும் ஸமானம்; அன் பிருந்தால் மனிதனும் தெய்வமும் ஸமானம்; அன்பு பூமியிலே மேலோங்கி நிற்கும். அப்போது மாதம் மூன்று மழை நேரே பெய்யும். பஞ்சம் என்ற வார்த்தையே இராது. தெற்கு தேசத்தில் பிராமண குலத்தில் கபில முனிவரும் அகப்பேய்ச் சித்தரும் திரும்பி அவதாரம் செய் வார்கள். அவர்கள் ஊரூராகப் போய் ஜனங்களுக்கு தர்மத்தைச் சொல்லி ஜாதி வழக்கை யெல்லாம் தீர்த்து வைப்பார்கள். அப்போது தர்மம் நிலை பெற்று நிற்கும். நீ இருக்கும்போதே இந்தப் புதிய யுகம் ஆரம்பமாய்விடும் உன் கண்ணுலே பார்ப்பாய்' என்று என் தகப்பனு சொன்னுர்.''

இங்ஙனம் அந்தக் கிழச் சாம்பான் சொல்லி முடி தான். பிறகு நேரமாய் விட்டபடியால் சபையைக் கலைத் விடலாமென்று நான் சொன்னேன். சேஷய்யங்கா அந்தக் கிழச்சாம்பானைப் பல வார்த்தைகள் சொல்லி புகழ்ந்தார். பிறகு அவ்விருவரும் தனியாகப் போ ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பால் சேஷய்ய கார் செம்படவன் கையில் இன்னும் கால் ரூபா கொடுத்து, ''என்னுல் உனக்கு நஷ்டமேற்பட்டதற்குச்

